வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்




சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.



# தேவையில்லாமல் ஒரு துப்பாக்கி சூடு!

**—மதங்களின் பெயரால் நடந்த ஓர் அநாகரீகம்**

கடந்த மாதம் 19—ந்தேதி, கொல்லங்கோட்டில் ஏற்பட்ட கோஷ்டி கலவரத்தில் போலீஸார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் இரண்டு பேர் பலியாயினர்; பலர் காயமுற்றனர்; வீடுகள் தீக்கிரையாயின — என்ற செய்தி அறிந்து, உண்மை நிலையை அறிய உடனடியாக நாங்கள் கொல்லங்கோட்டிற்குச் சென்றோம்.

நாகர்கோவிலிலிருந்து சுமார் 33 மைல்கள் தொலைவில், தமிழ்நாடு — கேரளா எல்லைப் பகுதியில் அமைந்துள்ளது கொல்லங்கோடு நகரம். இது கடற்கரையை ஒட்டி அமைந்துள்ளது. கொல்லங்கோட்டிலுள்ள கன்ன நாகம் ஜங்ஷனில் நாங்கள் போய் இறங்கிய போது, கடைகள் அடைக்கப்பட்டிருந்தன. வங்கி, ஆஸ்பத்திரி, பள்ளிகள் என்று அனைத்தும் மூடப்பட்டிருந்தன. மக்களின் நடமாட்டமே இல்லை!

நாங்கள் சென்று கொண்டிருந்த போது ஓர் இஸ்லாமிய இளைஞர் எதிரில் வந்தார். அவரிடம் இங்கு நடந்த உண்மையை அறிய வேண்டும் என்றதும், அவர் கொல்லங்கோடு மேடவிளாகம் முஸ்லீம் ஜமாத் செயலாளர் அப்துல் சலாம் என்பவரைச் சந்திக்க எங்களை அழைத்துச் சென்றார். தென்னந்தோப்பு வழியாகச் சென்றோம். அந்தத் தோப்பிலிருந்த வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டு, எலும்புக் கூடாகக் காட்சியளித்தன. கயிறு திரிக்கும் ராட்டைகள் உடைக்கப்பட்டிருந்தன. தோப்பில் காவலுக்குப் போடப்பட்டிருந்த போலீஸார் போரடித்துப் போய், சீட்டு விளையாட்டில் மும்முரமாகியிருந்தனர்!



• தீக்கிரையாக்கப்பட்ட வீடுகள்...

அப்துல் சலாமைச் சந்தித்ததும் அவர் சொன்னார்: "கொல்லங்கோடு சுமார் 28,000 மக்கள் தொகையைக் கொண்டது. இதில் கிறிஸ்தவ மீனவர்கள் சுமார் 11,000 பேர். முஸ்லீம்கள் சுமார் 2,500 பேர். மீதி, மற்ற மதத்தவர்கள். கடந்த 18—ந்தேதி இரவில் கிறிஸ்தவ ஜனநாயக முன்னணித் தலைவர் சத்தியராஜ் சைக்கிளில் சென்று கொண்டிருந்த போது, கொல்லங்கோடு இந்து முன்னணித் துணைத் தலைவர் மணிகண்டன் என்பவர் ஒரு கிறிஸ்தவ நாடாரை அடித்துக் கொண்டிருந்ததைக் கண்டு, அது பற்றிக் கேட்டார்.

"இதனால், சத்யராஜுக்கும் மணிகண்டனுக்கும் தகராறு ஏற்பட்டு, கைகலப்பில் முடிந்தது. இருவரும் போலீஸ் நிலையத்திற்குச் சென்றனர். அவர்கள் வழக்கைப் பதிவு செய்து இருவரையும் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தனர். இரவு சுமார் பதினொரு மணியளவில், கிறிஸ்தவ ஜனநாயக முன்னணி அட்வகேட் ஜார்ஜ் மொராயிஸ் தன் நண்பர்களுடன் ஒரு காரில் சத்யராஜைப் பார்க்கச் சென்ற போது, கொல்லங்கோடு கன்ன நாகம் ஜங்ஷனில் வைத்து, சுமார் ஐம்பதுக்கும் மேற்பட்டவர்கள் காரைச் சூழ்ந்து, காரினுள் இருந்தவர்களைத் தாக்கினர். தாக்கப்பட்டவர்கள் போலீஸில் புகார் செய்தனர்.



* பலியான அந்தோணிபிச்சையின் குடும்பம்.



* அப்துல் சலாம்.

''இதற்கிடையில், கல்லடித்தோப்பிலுள்ள ஜார்ஜ் மொராயிஸ் வீட்டில் இந்து முன்னணியினர் தீ வைத்தனர். உடனே, கிறிஸ்தவ மீனவர்கள் கல்லடித் தோப்பிலுள்ள இந்துக்களின் வீடுகளைக் கொளுத்தினர். தொடர்ந்து, கன்னநாகம் ஜங்ஷனில் முடிப்புறை ரோடு பக்கத்திலுள்ள கிறிஸ்தவர்களுக்குச் சொந்தமான தென்னந்தோப்புகளை இந்து முன்னணியினர் வெட்டி நாசம் செய்தனர். இதனால், ஆத்திரமடைந்த கிறிஸ்தவ மீனவர்கள், மேடவிளாகம் பகுதியிலுள்ள இந்துக்களின் வீடுகளைத் தீக்கிரையாக்கினர்.

''மறுநாள் காலை (19—ந்தேதி) எட்டு மணியளவில், மீன் விற்பதற்குச் சென்றிருந்த மரிய தங்கம் என்ற மீனவப் பெண்ணை, கன்னநாகம் ஜங்ஷனில் வைத்து, மணிகண்டன் கோஷ்டியினர் கத்தியால் தாக்கியிருக்கின்றனர். அவள் வெட்டுக் காயத்தோடு, வள்ளவிளை மீனவப் பகுதிக்குஓடி, அங்குள்ள மீனவர்களிடம் சொல்லி அழுதாள். இதே நேரத்தில், வள்ளவிளையிலிருந்த தலைமையாசிரியர் வர்கீஸ் என்பவரின் வீட்டையும் இந்து முன்னணியினர் நாசம் செய்து, அங்கிருந்த பொருள்களைக் கொள்ளையிட்டுச் சென்றனர்!

''இதனால் ஆத்திரம் அடைந்த கிறிஸ்தவ மீனவர்கள் கொதித்தெழுந்து, வள்ளவிளை ரோட்டிற்கு வந்ததும், கருங்கல் சப்—இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய பாண்டியன் தலைமையில் துப்பாக்கிச் சூடு நடைபெற்றது. போலீஸ் ஐந்து ரவுண்ட் சுட்ட னர். இதில் இரண்டு இளைஞர்கள் ப·லியாயினர். பலர் காயமுற்றனர்! இதுதா ன நடந்தது. இந்தக் கலவரத்தினால் எங்களு க்கு எந்தப் பாதிப்பும் இல்லாவிட்டாலும், பதற்ற நிலை இன்னும் குறையவில்லை!'' எனறு சொல்லி முடித்தார்..

அவரிடம் விடைபெற்றுக் கொண்டு மீனவப் பகுதிக்கு வரும் வழியில், வக்கீல் ஜார்ஜ் மொராயிஸ் எதிரில் வந்தார். இந்தக் கலவரத்தினால் பாதிக்கப்பட்டவர் என்பதால், அவரிடமும் இதுபற்றிக் கேட்டோம்.

அப்துல் சலாம் சொன்ன விஷயத்தை அப்படியே விவரித்தார். பிறகு: ''இந்தத் துப்பாக்கிச் சூடு, தேவையில்லாததும், நியாயமற்றதும் ஆகும்! போலீஸார் நினைத்திருந்தால், துப்பாக்கிச் சூடு இல்லாமலேயே இதைச் சமாளித்திருக்கலாம். எந்தவித முன்னறிவிப்புமின்றிதான் போலீஸார் துப்பாக்கிச் சூடு நடத்தியிருக்கின்றனர். இதற்குப் பின்னால், தங்களுடைய பாதுகாப்பிற்காகவும் கலவரத்தை அடக்கவும் துப்பாக்கிச் சூடு நடத்தியதாகவும் சொல்கின்றனர்!

''It is not at all a commun al clash; it is a struggle of christians for the sake of their existence. காரணம், கடந்த நாலரை ஆண்டுகளுக்கு மேலாக நாங்கள் இந்து முன்னணியினரால் பல்வேறு வழிகளில் துன்பமடைந்து வந்திருக்கிறோம். இந்தியா ஒரு மத சார்பற்ற நாடு என்று அரசியல் சட்டம் சொன்னாலும், சிலர் இதை ஒரு மத நாடாக்கும் முயற்சியில் ஈடுபட்டு வருகின்றனர்!'' என்று உணர்ச்சிவசப்பட்டு அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போது—

ஒரு வயதான பெண், ''ஐயா... என் மகனைக் காண முடியல்லேங்க... என் மகன் என்ன ஆனான்? எங்க இருக்கான்... சொல்லுங்கய்யா...?'' என்று கண்ணீர் மல்க அழுதபடி கேட்டாள். ''உங்க மகன் போலீஸ் கஸ்டடியில் இருக்கான் அம்மா... கவலைப்படாதீங்க...'' என்று அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு எங்களைப் பார்த்து, ''இவங்க மகன், வர்கீஸ் என்பவன் இந்தத் துப்பாக்கிச் சூட்டில் காலில் குண்டடிப்பட்டு, போலீஸ் கஸ்டடியில் இருக்கிறான்!'' என்று விளக்கம் தந்தார் ஜார்ஜ் மொராயிஸ்.

அங்கிருந்து நேராகத் துப்பாக்கிச் சூடு நடந்த வள்ளவிளைப் பகுதிக்கு வந்தோம். துப்பாக்கிச் சூடு நடந்த நீண்ட நெடிய சாலை,



* ''ஐயா என் மகனைக் காணவில்லை!''

வெறிச்சோடிக் கிடந்தது. சாலையில் ஆங்காங்கே இரத்தம் உறைந்து காய்ந்து போயிருந்தது. வள்ளவிளைப் பகுதியிலுள்ள பொது மக்களிடமும் பரவலாக விசாரித்த போது, 'துப்பாக்கிச் சூடு தேவையில்லாதது; அதைத் தவிர்த்திருந்தால், அப்பாவி இளைஞர்கள் பலியாகியிருக்கமாட்டார்கள்!' என்றே பரவலாகக் கருத்துத் தெரிவித்தனர்!

பிறகு, துப்பாக்கிச் சூட்டில் பலியான இருபத்தொரு வயதான இளைஞன் மரியதாஸனின் வீட்டிற்குச் சென்றோம். அந்த வீட்டின் முன்பு துக்கம் விசாரிக்க வந்திருந்த பெண்களின் முகங்களில் இன்னும் வருத்தம் இருந்தது. மகனை இழந்த துயரத்தில் தாயும் தந்தையும் ஒரு மூலையில் அழுதபடி படுத்திருந்தனர். அவர்களைத் தொந்தரவு செய்ய நமக்கு மனம் வராததால் திரும்பிவிட்டோம்.

துப்பாக்கிச் சூட்டில் பலியான இன்னொரு இளைஞன் அந்தோணிப்பிச்சையின் வீட்டை நெருங்கினோம். அந்தோணிப்பிச்சையின் தந்தை ஆரோக்கியம் சொன்னார்:

''என் மகனுக்கு 26 வயதாகிறதுங்க. இன்னும் கலியாணமாகவில்லை. என்றால் கழிஞ்ச இரண்டு வருஷமாகத் தொழில் பார்க்க



• நிலாமுதீன்.



• ஜார்ஜ் மொராயிஸ்.



• செல்லத்துரை.



• பாலசந்தர்.

முடியலீங்க. என் மகன்தான் கடலுக்குப் போய், எங்களைக் காப்பாற்றி வந்தான். அன்னைக்கும் காலையில காப்பி குடிக்கப் போனவன், கடைசில இறந்துதான் வந்தாங்க. எனக்கு கலியாண வயசில மூணு பெண் பிள்ளைகள் இருக்குதுங்க...! இனிமேல் எங்களுடைய கதி என்னங்க...?'' என்று அவர் துயரத்தோடு கேட்டார். அவருக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, எதிர்த் தரப்பினரான இந்து முன்னணி எம். எல். ஏ. வை. பாலசந்தர் என்பவரைச் சந்தித்து, இந்தத் துப்பாக்கிச் சூடு பற்றிக் கேட்டோம்.

எடுத்த எடுப்பிலேயே அவர், ''கொல்லங்கோடு சம்பவம் தனி நபர் பிரச்சனை அல்ல! கொல்லங்கோடு இந்து முன்னணித் துணை அமைப்பாளர் மணிகண்டன் நாயரை, கிறிஸ்தவ ஜனநாயக முன்னணித் தலைவர் சத்யராஜ் வேண்டுமென்றே தகராறுக்கு இழுக்க எழுந்த பிரச்னை! It is not accidental, but created!'' என்றார். தொடர்ந்து, ''காரணம், கொல்லங்கோட்டில் சட்டத்திற்குப் புறம்பாக முஸ்லீம்களும் கிறிஸ்தவர்களும் இவர்களுக்குத் துணை நின்ற கம்யூனிஸ்டுகளும் செய்த அட்டூழியங்களை இந்து முன்னணியினர் எதிர்த்தனர். அதற்குக் காரணம், மணிகண்டன் நாயர்தான் என்று கருதி, அவரைப் பழிவாங்கத் திட்டமிட்டனர். அதில் முதல் கட்டமாக, மேடவிளா கத்திலுள்ள அவருடைய ஆலைக்குச் செல்லாமல் அவரைத் தடுத்தனர். அதனால் அவருக்கு ஆயிரக்கணக்கான ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது. ஆனால், அவர் பணியவில்லை! அதற்குப் பிறகு, சுமார் நாற்பது நாட்களுக்கு முன்பு, அவரைக் கடலில் தூக்கிப் போடுவதற்கான முயற்சி நடந்தது. அவருக்குக் கடன் கொடுத்திருந்த ஒரு கிறிஸ்தவ மீனவர், எங்கே இவர் இறந்து விட்டால் தனக்குப் பணம் கிடைக்காதே என்று அவரைக் காப்பாற்றி விட்டார். பிறகு 17–ந்தேதி தக்கலையில் நடைபெற்ற மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் மாநாட்டின் போது, ஐந்து லாரிகளில் தொண்டர்கள் சென்றார்கள். அவர்கள் துணை உண்டு என்ற நம்பிக்கையில் வலுக்கட்டாயமாக, மணிகண்டன் நாயரோடு ஒரு தகராறு உருவாக்க வேண்டும் என்பதற்காக 18–ந்தேதி இரவில் அவரை அடித்து உதைத்தார்கள். அவரை அடித்தவர், கிறிஸ்தவ ஜனநாயக முன்னணித் தலைவர், சத்யராஜ். இருவரும் காவல் நிலையத்தில் புகார் செய்ததின் பேரில், மணிகண்டன் நாயர் குழித்துறை அரசு மருத்துவமனையில் உள் நோயாளியாகச் சிகிச்சை பெற்று வந்தார்!

''அவர் ஊரில் இல்லாத சமயத்தைத் தாக்குவதற்குத் தக்க தருணம் என்று கருதி, மறுநாள் காலை தாக்குவதற்கு முடிவு செய்தனர். 19–ந்தேதி காலையில் கிறிஸ்தவர்கள் இந்துப் பகுதிக்கு வந்து தாக்கியதில், காயம் அடைந்தவர்கள் எல்லாம் இந்துக்கள் மட்டும்தான். கிறிஸ்தவர்களில் யாருக்கும் காயமில்லை. இதிலிருந்து இந்துக்கள் தாக்கவோ, தாக்குதல் நடக்குமென்று எதிர்பார்க்கவோவில்லை என்பது தெரிகிறதல்லவா?

''கிறிஸ்தவ மீனவர்கள், வீடுகள், கயிறு திரிக்கும் ராட்டைகள், கதம்பைத் தும்புகளுக்குத் தீ வைத்ததோடு, வீட்டிலிருந்த பொருட்களையும் கொள்ளையிட்டுச் சென்று விட்டனர். வீட்டையும் தங்கள் பொருட்களையும் இழந்த மக்கள், மூன்று முகாம்களில் சுமார் 2500 பேர் அகதிகளாக இருக்கின்றனர். அவர்களுக்கு உணவு மற்றும் வசதிகளை இந்து மதத்தினர் கொடுத்துப் பராமரித்து வருகின்றனர். மேலும், இந்தக் கலவரத்தின் பின்னால், 42 வயதான பாலகிருஷ்ணன் நாயர் என்பவரைக் காணவில்லை. அவ

ருடைய மனைவி, 'அவரைக் கொன்றிருந்தால், அவருடைய ஒரு எலும்புத் துண்டையாவது தாருங்கள். நாங்கள் ஈமக் கடன்களைச் செய்கிறோம்!' என்று கதறி அழுகிறான்!'' என்றார்.

''கடந்த மூன்று ஆண்டுகளில் மண்டைக்காடு, நாகர்கோவில், கொல்லங்கோடு — ஆகிய மூன்று இடங்களிலும் மதக் கலவரம் சம்பந்தமாகத் துப்பாக்கிச் சூடு நடைபெற்றுள்ளதே... இனிமேலும் இது தொடராமலிருக்க என்ன வழி?'' என்று மீண்டும் கேட்டதும், ''இப்போதும் குமரி மாவட்டம் கொந்தளித்துக் கொண்டுதான் இருக்கிறது. குமரி மாவட்டத்தில் கன்னியாகுமரி, மண்டைக்காடு, கொல்லங்கோடு, கூட்டாலு மூடு — ஆகிய நான்கு கடற்கரையை ஒட்டிய பகுதிகளிலும் இந்துக் கோயில்கள் அமைந்துள்ளன. அந்தந்தக் கோயில் திருவிழாக்களின் போது, பக்தர்கள் கடலில் சென்று நீராடி, கடவுளை வணங்கி வந்தனர். தற்போது, கடற்கரையிலுள்ள மீனவர்கள் கடலில் நீராடத் தடை விதித்தது தான் இந்தப் பிரச்னைகள் எழக் காரணம்! பக்தர்கள் கடலில் சென்று நீராடுவதற்கு அனுமதிக்கப்படாதவரை, குமரி மாவட்டத்திலுள்ள பிரச்னை என்றும்தீராது!'' என்று உறுதியாகப் பதிலளித்தார்.

துப்பாக்கிச் சூடு நடந்த இடத்தைப் பார்வையிட்ட ஐ. ஜி. ரெங்கசாமி, 'துப்பாக்கிச் சூடு நடத்தியது சரிதான்!' என்று ஒரே வார்த்தையில் முடித்துவிட்டார். அப்புறம் எதற்கு ஒரு விசாரணைக் கமிஷன்? (மண்டைக்காடு சம்பந்தமான விசாரணை முடிவே இன்னும் வெளிவரவில்லை!)

குமரி மாவட்டத்தில் இது மூன்றாவது துப்பாக்கிச் சூடு என்பதால், இனிமேல் இத்தகைய அசம்பாவிதங்கள் நிகழாவண்ணம் தடுக்க, அரசு என்ன செய்ய வேண்டும் என்று சிலரிடம் கருத்து கேட்ட போது, அவர்கள் சொன்ன கருத்துக்கள்:

**கே. நிலாமுதீன் (வழக்கறிஞர்):**

''மக்களிடையே இருந்த அடிப்படை மத ஒற்றுமை குலைய ஆரம்பித்ததால், ஒருவரையொருவர் சந்தேகக் கண்ணோட்டத்தோடு பார்க்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இதற்குக் காரணம், தவறான எண்ணம்தான். இந்தத் தவறான எண்ணத்தை முதலில் மக்கள் மனத்திலிருந்து களைய நாம் முயற்சி செய்ய வேண்டும்!''

**பி. செல்லத்துரை (பத்திரிகையாளர்):**

''சிறு பிரச்னைகளைக் குறித்து, காவல் துறை மனுக்கள் வந்த உடனேயே, அதனை அவசரப் பிரச்னையாக எடுத்துக் கொண்டு செயல்படலாம். இப்படி, பிரச்னை வந்த ஊரில் அல்லது நகரத்தில் ஒரு 'சமாதானக் குழு'வைக் காவல்துறையினர் அமைக்கலாம். அக்குழுவில் எல்லா சமயத்தவர்களும் பங்கு கொண்டு, எந்தப் பிரச்னையானாலும் இக்குழுவழியாகத்தீர்க்கப்படக்காவல்துறையினர் முற்பட வேண்டும்!''

—ஆக, இதுவரை, குமரி மாவட்டத்தில் நடந்துள்ள மூன்று துப்பாக்கிச் சூடுகளும், போலீஸாரின் அவசரத்தாலும், மதத்தின் பெயரால் தூண்டப்பட்ட உணர்ச்சிகளாலும்தான் நடந்திருக்கின்றன. இது போன்ற மனித அநாகரிகங்களைத் தடுக்க அரசு பாரபட்சமற்ற முறையில் சில கட்டுப்பாடுகளையும் தேவைப்பட்டால் சட்டங்களையும் கூட அமல்படுத்த வேண்டும். அதைத்தான் எல்லா மதத்திலுமுள்ள அமைதி விரும்பிகள் எதிர்பார்க்கிறார்கள்.

செய்தித் தொகுப்பு:
**குளச்சல் இப்ராஹீம்.**
புகைப்படங்கள்:
**ரமீஸ் ஸ்டூடியோ.**

# அடுத்த இதழில்...



''நான் ஊழலை எதிர்த்தேன்; மற்ற அமைச்சர்கள் என்னை எதிர்த்தார்கள்!''

—முன்னாள் பிரதமர் நந்தா மனம் விட்டுப் பேசுகிறார்



''எப்ப சாப்பிடுவோம்னு எங்களுக்கே தெரியாது''

—COVER STORY

# மின்னும் மேனி
# மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி...
எந்நாளும் உங்கள் -
பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு,
ஹபுஷா (தேவதாரம்) ஆகிய
நாலு வகை இயற்கைத்
தைலங்களின் நற்கலவை
யான ரெக்ஸோனா...சருமப்
பராமரிப்பிற்கு இயல்பான
வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

# முதல் மரியாதைக்குரிய

'முதல் மரியாதை' படத்திற்கு நல்ல ரிப்போர்ட் மாவட்டங்களிலிருந்து வந்திருந்தது. மகிழ்ச்சியான 'மூடி'ல் இருந்தார், பாரதிராஜா.

''இன்று சிவாஜியை வைத்துப் படம் எடுப்பது பெரிய 'ரிஸ்க்' என்று பரவலாகப் பேச்சு அடிபடுகிறதே!''

"ஒருதணியாததாகம்மனக்குள்ளே இருந்து கொண்டே வந்தது. '38 வருடம் சினிமா உலகில் சாதனை படைத்துள்ள சிவாஜியை வைத்து ஒரு படம் பண்ண வேண்டும். சிவாஜியைப் பற்றிப் பேசும்போது அவரை இயக்கிய என் பெயரும் வரலாற்றில் இடம் பெறும்படியாக அந்தப் படமும் அமைய வேண்டும். எனவே இதுவரை அவர் எந்தப் படத்திலும் நடிக்காத புதுமையான வேடத்தைக் கொடுத்து நடிக்கச் செய்ய வேண்டும்' என்ற எண்ணம் வலுப்பட்டுக் கொண்டே வந்தது. அதை மனத்தில் கொண்டுதான் இரண்டு வருடங்களுக்கு முன்னரே அவருடைய கால்ஷீட்டைப் பெற்றுக் கொண்டேன். சமீப காலங்களில் அவரது படங்கள் தோல்வியைத் தழுவிக் கொண்டு வர, நான் இந்தச் சமயத்தில் அவரை வைத்துப் படம் எடுப்பதைப் பார்த்துப் பலர், 'சிவாஜி தான் கெட்டது போதாது என்று பாரதிராஜாவையும் சேர்த்துக் கெட்டுப் போக வைக்கிறார் போலிருக்கிறது' என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் படம் வெளிவந்த பிறகு — இப்போது — எல்லோரும் ஆச்சர்யத்தோடு படத்தின் வெற்றியை ஆராய்கிறார்கள்."

''முதல் மரியாதை' தலைப்பு எந்தவிதத்தில் பொருத்தமானது?''

''தலைப்புக்கும் படத்துக்கும் முடிச்சுப் போடாதீர்கள். நான் சிவாஜி ஸார் அவர்களுக்கு ஆரம்பத்தில் மாலை போட்டுப் படத்தை ஆரம்பிக்கிறேன் அல்லவா, அது தான் 'முதல் மரியாதை'! பின்னால் கதை வேறு.

''சிவாஜி கேரக்டர் ஒரு மாறுபட்ட கேரக்டர்தான். அதை உருவாக்கிய விதம் பற்றிக் கூற முடியுமா?''

"சிவாஜி கேரக்டர் ஒரு நடுத்தர வயது மனிதன். ஒரு வாலிபனின் இளமைப் பருவத்தில் எப்படி ஓர் இளம் பெண் அவன் இதயத்தை வருடிச் செல்வாளோ, அதே போலத்தான் 40 வயதை நெருங்கும் மனிதர்களின் வாழ்விலும் ஒரு இளம் பெண்ணின் பாதிப்பு



# பாரதிராஜா

இருக்கும். இதற்கு வயதோ அழகோ ஒரு தடையாக இருக்க முடியாது. இதைச் சிலர் ஒதுக்கிவிட்டு, கண்டு கொள்ளாமல் விலகிச் செல்வார்கள். ஆனால் அனுபவப்பூர்வமாக உணர்பவர்களும் உண்டு. இந்த மாதிரியான உணர்வுதான் சிவாஜிக்கும் ராதாவுக்கும் ஏற்பட்டுக் காதலாகிக் கனிந்து விடுகிறது. அந்த இளம்பெண்ணின் உள்ளத்தில் முதலில் சிவாஜியைப் பற்றிய ஒரு மரியாதையும், பயமுமே இருந்தது. வடிவுக்கரசி அவளை நடுத்தெருவில் விளக்கு மாற்றால் அடித்ததும் தான் அந்த இளம் பெண் சிவாஜி வடிவத்தை அவள் மனத்தில் புகுத்திக் கொள்கிறாள்.. காதல் உணர்வு அப்போதுதான் வருகிறது. இதைப் 'பூச்சொரிந்து' காட்டியிருக்கிறேன்.''

''நீங்களே எழுதிய சொந்தக் கதையை நீங்கள் படமெடுக்காததால், 'உங்களுக்குக் கதை எழுதத் தெரியாது என்று ப்ரவலாகப் பேசப்படுகிறதே!''

''கதாசிரியர் சொல்லும் கதையின் கருவை மட்டும் நான் எடுத்துக் கொண்டு எனது பாணியில் திரைக்கதை அமைத்து நான் தேர்ந்தெடுக்கும் லொகேஷனில் என் கற்பனைக்கு மெருகூட்டி விஷுவல் மீடியமாகக் கொடுக்கிறேன். நான் எடுக்கும் ஒவ்வொரு படமுமே எனது மன வெளிப்பாடுதான். சிலர் கதை எழுதுவார்கள், சிலர் கதை சொல்லுவார்கள், என் கதைப் படைப்பு திரை ஓவியமாகிறது.''

''சினிமா ஒரு 'விஷுவல் மீடியம்' என்பதை முதன் முதலில் காண்பித்தவர் நீங்கள் தான். ஆனால் இந்தப் படத்தில், வளவளவென்று டைலாக் வருகிறதே! குறிப்பாகக் கடைசியில் சத்யராஜ் பேசும் இடம்.''

''எங்கே வசனங்கள் தேவையோ அங்கே வசனங்களை வைத்தே ஆக வேண்டும். அந்த இடம் ஒரு திருப்பமான இடம்.. வசனங்கள் கண்டிப்பாகத் தேவை. நீங்கள் கடைசி 900 அடி படத்தைப் (அதாவது கிளைமாக்ஸ் காட்சியைப்) பற்றி என்ன சொல்கிறீர்கள்? ஒரு வசனம் கிடையாது. அந்தக் கட்டத்தில் படம் பார்க்கிற ரஸிகர்கள் ஊளையிட்டால் எனக்குப் படுதோல்விதான். ரஸிகர்கள் சீரியஸாக ரஸித்ததைப் பார்த்த பின்தான் நிம்மதியாக மூச்சு விட்டேன். ஆக எந்த இடத்தில் வசனம் தேவையோ அங்கு வசனத்தைக் கொடுத்தும், எங்கு தேவையில்லையோ அங்கு விஷுவலாகக் காட்டவும் தெரிந்தவனே டைரக்டர்.''

''படம் முடிந்து வெளியே வரும்போது ஒரு இனம் புரியாத அவஸ்தை தோன்றுகிறதே! முதலில் அந்த இளம் காதலர்கள் இறப்பதும், பின்பு சிவாஜியும், ராதாவும் இறப்பதும்... மனத்தை நெருடுகின்றனவே?''





**ஒளிப்பதிவு செய்த கண்ணன் சொல்கிறார்:**

"பாரதிராஜாவுடன் 14 படங்கள் செய்திருக்கிறேன். முதல் மரியாதை படத்தைப் பொறுத்தமட்டில், முதலிலேயே அவரிடம், 'இயற்கையில் என்ன வெளிச்சம் கிடைக்கிறதோ அதில்தான் படமாக்கப் போகிறேன்' என்று தெரிவித்ததும், ஒப்புக் கொண்டார். முதலில் 1000 அடிகள் எடுத்து 'ரஷ்' போட்டுப் பார்த்ததும், என் கைகளைப் பிடித்துக் கொண்டு 'இந்தப் படத்திலே நிச்சயம் நீ பேர் வாங்கப் போறே' என்று தட்டிக் கொடுத்தார். என் ஒளிப்பதிவைச் செம்மைப்படுத்துவது அந்த லொகேஷன் தான். கர்நாடக மாநிலம் கொள்ளேகால் என்னும் இடத்தின் அருகிலுள்ள தலைக்காவிரி பகுதியில் பெரும்பாலான காட்சிகள் படமாக்கப்பட்டன. படத்தில், தண்ணீரிலிருந்து நிலவை எடுத்து மீண்டும் தண்ணீரிலேயே அந்த இளம் பெண் (ரஞ்சனி) விடும் காட்சியில் தியேட்டர்களில் கைதட்டல் காதைப் பிளக்கிறது. அதேபோல் என்னை இந்தப் படத்தில் வியக்க வைத்த காட்சி: சிவாஜி மீன் சாப்பிடும் இடம். கிட்டத்தட்ட 300 அடி தொடர்ச்சியாக ஓடும் இந்தக் காட்சியில் சிவாஜி நடித்த போது, டைரக்டர் உட்பட எல்லோரும் எங்களை மறந்து அவரது நடிப்பில் லயித்து விட்டோம்.

"இந்தக் கதையைக் கிராமத்து ஜனங்கள் எப்படி ரசிப்பார்களோ என்ற கவலை எனக்கு இருந்தது. ஆனால் குன்றத்தூரில் எங்கள் பண்ணையில் வேலை செய்யும் படிக்காத பத்துப் பேரை அழைத்து வந்து படத்தைப் பார்க்கச் சொன்னேன். டெக்னிக்கலாகப் பல 'கட்'கள் வந்து படம் 'சடக், சடக்' என்று தாவிச் சென்றாலும் அந்தக் கிராமத்து ஜனங்கள் கதையைக் கோவையாகச் சொன்னது என்னை வியக்க வைத்தது."

(சென்னை அடையாறு பிலிம் இன்ஸ்டிடியூட்டில் படித்த கண்ணன் மறைந்த இயக்குனர் பீம்சிங்கின் மகன்.)

"இனம் புரியாத அவஸ்தை என்று சொன்னீர்கள் அல்லவா, இங்குதான் நான் வெற்றி பெற்று இருக்கிறேன். தன் மீது அளவில்லா மரியாதையும், காதலும் வைத்திருக்கும் ராதா தன்பொருட்டு ஜெயிலில் வாடுவதை நினைத்து அந்த ஜீவன் (சிவாஜி) நாளுக்கு நாள் உருகிப் படுத்த படுக்கையாகி விடுகிறது. அவளையே எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கிறது. அவள் பாதங்கள் அந்த மண்ணில் பட்டதும், அவர் உடம்பு சிலிர்த்துக் கொள்கிறது. அவள் சுற்றித் திரிந்த மண்ணின் புல், பூண்டும், பறவைகளும், அவளை வரவே ேற்பதையும் உலகமே Vibrate ஆவதையும காட்டி இருக்கிறேன்.

"அவள் அந்த வீட்டிற்குள் நுழைந்து அவர் அருகில் அமர்ந்து கொண்டவுடன், பல வருடங்களாகக் கையில் வைத்துக் கொண்டிருக்கும் வெண்முடித் தாலியை அவளிடம் கொடுக்கிறாரே; அந்தக்கணத்தில் — அவர் அவள் கையைப் பற்றிய அந்த வினாடிகளில் — அவரோடு 1000 வருடங்கள் வாழ்ந்த திருப்தியை அவள் அடைகிறாள். அவரும் அடைகிறார். அவர் உயிர் பிரிகிறது. அப்போதே ராதா கேரக்டரும் உள்ள பூர்வமாகச் செத்து விடுகிறாள். பின்னர் நடைப்பிணமாகத்தான் அவள் ரயிலில் ஏறிச் செல்கிறாள். உடலுக்கும் மரணம் ஏற்படுகிறது. அவள் சாகக் கூடாது. அவர் நினைவிலேயே வாழ வேண்டும் என்று ரசிகர்கள் எண்ணுவார்கள். அந்தத் தெய்வீகக் காதலின் சாட்சியாக ஒரு ஆத்மா உலகத்தில் உலவ வேண்டும் என்ற ஆசைதான் காரணம். ஆனால் அந்தக் கேரக்டர் இறந்து விட்டாளே! இதுதான் இப்போது ரசிகர்கள் மனத்தில் நெருடிக் கொண்டிருக்கிறது!"

"சிவாஜியின் குடும்ப ரகசியம் யாருக்குமே தெரியாத போது அந்தச் செருப்புத் தைக்கும் தொழிலாளிக்கு மட்டும் எப்படித் தெரியும்?"

"நீங்கள் கேட்பதில் உள்ள நியாயத்தை உணர்கிறேன். ஆனால் இந்தக் குறை குற்றமாகிவிடாது. ஏதாவது ஒரு கேரக்டர் மூலம் அந்த ரகசியத்தை வெளிக் கொணர வேண்டும். அந்தத் தொழிலாளிக்கு மட்டும் அந்த ரகசியம் எப்படித் தெரியும் என்பதைக் கூறப் போனால் அது ஒரு உபகதையாகும். படத்தின் (டெம்போ) விறுவிறுப்பு குறையும். சம்பந்தமில்லாமல் அந்த ரகசியம் அங்கு உடைக்கப்படவில்லை. ராதா சிவாஜியை மதிக்காமல் பேசியதைக் கவனிக்கும் அந்தத் தொழிலாளி, சிவாஜி கேரக்டரின் மதிப்பு அவளுக்குப் புரியும் வண்ணம் அந்த ரகசியத்தை உடைக்கிறார்."

"இந்தப் படத்தில் நீங்கள் இன்னும் நன்றாகச் சொல்லலாம் என்று நினைத்த காட்சி ஏதாவது உண்டா?"

"நகையைப் பறிக்க வரும் ராமநாதனின் கட்டை விரலை அந்த இளம்பெண் கடிக்கிறாளே, அந்த இடம், கி. ராஜ்நாராயணன் அவர்கள் கதையில் வரும் ஒரு காட்சி. என் படத்தில் உபயோகப்படுத்தி இருக்கிறேன். அந்த ஸீனில் தண்ணீருக்குக் கீழே என்ன நடக்கிறது என்பதைக் காண்பிக்க விரும்பி

Godrej தருகிறது

# பெஸ்டோ

கிலோ ரூ. 7.20.
இந்த விலையில் கிடைக்க-
கூடிய ஒரே உயர்ரக
புளூ டிடர்ஜெண்ட் பவுடர்








- **அதிக பளபளப்பு**— பெஸ்டோவின் விசேஷ ஃபார்முலா துணிகளுக்குத் தருகிறது அதிக பளபளப்பு, அதிக வெண்மை.
- **அதிக மென்மை**— கடுமையான வாஷிங் பவுடர்களைப் போல் பெஸ்டோ துணிகளுக்குக் கெடுதல் செய்வதில்லை. மேலும் உங்கள் கைகளை மென்மையாக வைக்கிறது.
- **அதிக வெண்மை**— துவைக்கத் துவைக்க துணிகள் பழுப்படைவதில்லை. ஆகவே வெளுக்க வெளுக்க வெண்மை நீடித்து நிலைக்கும்.

**பெஸ்டோ— ஒரு கிலோவுக்கு**
**ரூ. 7.20 மட்டுமே!**
**உள்ளூர் வரிகள் தனி.**



Godrej
பெஸ்டோ
கோத்ரெஜ் பெஸ்டோ
புளூ டிடர்ஜெண்ட் பவுடர்

உயர் தரத்திற்கும் சிக்கனத்திற்கும்

CHAITRA-B-G-276 TAM R



டாக்டர்: ''டாக்டரிடமும், வக்கீலிடமும் எதையும் மறைக்கக் கூடாது.''
நோயாளி: ''சத்தியமா என்கிட்டே இனி பைசாவும் இல்லே டாக்டர்...''

—சீழை. அ. கதிர்வேல்.

**திரைக்கதை வசனம் எழுதிய ஆர். செல்வராஜ் கூறுகிறார்:**

கடந்த இரண்டு வருடமாகவே நடிகர் திலகத்துக்கும் பொருத்தமான கதையொன்று வேண்டுமென்று பாரதிராஜா என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார். நானும் எவ்வளவோ கதைகள் சொன்னேன் — எதுவுமே பாரதிக்குத் திருப்தியளிக்கவில்லை. கடைசியாக பெங்களூரில் முடிவு செய்யப்பட்ட கதைதான் முதல் மரியாதை!

முடிவு செய்யப்பட்ட கதைக்கு டிஸ்கஷன் டிஸ்கஷன் என்று கிட்டத்தட்ட 75 ஆயிரம் ரூபாய் வரை செலவு செய்து போதுமான அளவு மெருகேற்றியபின் படப்பிடிப்பை ஆரம்பித்தார். காலை 7 மணி முதல் இரவு 12 மணி வரை படப்பிடிப்பு. பன்னிரண்டு மணிக்குப் பிறகு மீண்டும் அடுத்த நாள் எடுக்கப்படப் போகும் காட்சி — அதில் இடம் பெறப்போகும் வசனம் குறித்து டிஸ்கஷன்... இரவு இரண்டரைக்குமேல் ஆகிவிடும்... மீண்டும் 5½ மணிக்குப் படப்பிடிப்புக்குத் தயாராகிவிடுவார்!

படப்பிடிப்பு ஆரம்பித்த 80—வது நாள் —படம் திரையிடப்பட்டு விட்டது!

பாரதிராஜா பெரிய இயக்குனர் என்பதை விட, நல்ல ரசிகர் என்பதுதான் முக்கியமான விஷயம். அப்படிப்பட்டவர்தான் மக்கள் ரஸிக்கக் கூடிய படங்களையும் கொடுக்க முடியும். நல்ல விஷயங்களை அவர் ரசிக்கும் விதம் — தமக்குப் பிடிக்காத விஷயங்களை — நம் மனம் புண்படாமல் ஒதுக்கும் அழகு.. கதாசிரியர் நல்ல சம்பவம் ஒன்றைச் சொல்லிவிட்டால் — அவர் சொன்னதை விடச் சிறப்பாகப் படமாக்க வேண்டும் என்று அவர் நடத்தும் போராட்டம்....

படத்தின் முழு வெற்றியும் பாரதிராஜாவையே சேரும்.



னேன். ஆனால் அது முடியவில்லை. அதே போல, மனைவி இறந்ததும், சிவாஜியின் தங்கைமகன் பைத்தியமாகத்திரிந்துகொண்டு இருக்கிறான். நிறையப்பேர், 'சிவாஜி அவனை ஒன்றுமே கண்டு கொள்ளவில்லையே' என்று கேட்கிறார்கள். நான் அதுபோன்ற ஸீன்கள் எடுத்திருந்தாலும் படத்தின் நீளத்தைக் கருதி வெட்டி எடுத்து விட்டேன்.''

''நிழல்கள்' படம் தோல்வியுற்ற போது மக்களின் 'ரசனை உயரவில்லை' என்று சொன்னீர்கள். இப்போது உங்கள் கருத்து?''

''காதல் ஓவியம்'' படத்தை ரஸிகர்கள் நிராகரிக்கும் வண்ணம் நான் மோசமாகத் தரவில்லை. அதிகப்படியான 'டோஸ்' களைக் கொடுத்துவிட்டேனோ என்று என்னையே பரிசீலித்துக் கொண்டேன். ஒரு படி கீழே இறங்கி ரஸிகர்களையும் கைகோத்து அழைத்துக் கொண்டு மேலே செல்வது தான் என் ஆசை. அவர்கள் என்னோடு உயரும் போதுதான் நான் தைரியத்தோடும் துணிச்சலோடும் படங்களைத் தர முடியும்.''

''நீங்கள் சினிமா உலகுக்கு வந்த பிறகு சினிமாத் தொழிலுக்கு ஒரு பரிணாம வளர்ச்சி கிடைத்தது. இதுதான் முடிவா?''

''என்னைப் பொறுத்தமட்டில் இன்னும் நாலைந்து வருடம் கழித்து ஒரு வித்தியாசமான பாரதி ராஜாவைப் பார்க்கப் போறீங்க! தவிர, சர்வதேச அளவில் பேசப்படுவது போல் ஒரு பரிசோதனைப் படம் பண்ண வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. நான் சாவதற்குள் அப்படிப்பட்ட படத்தை எடுக்கணும்ங்கிற வெறி என்னுள் அவ்வப்போது எழுந்துக்கிட்டே இருக்கு.''

* * * * * * *

படம் வெற்றிகரமாக ஓடும் இந்தச் சமயத்தில், பாரதிராஜா நெகிழ்ந்து சொல்வது, படப்பிடிப்பின் போது சிவாஜி நடந்து கொண்ட முறையைத்தான். இதுவரை பல படங்களில் பார்த்துள்ள சிவாஜியின் மிகைப் படுத்தப்பட்ட நடிப்பு சிறிதும் வரக் கூடாது என்ற நினைப்பில் படமாக்கிய பாரதிராஜாவுக்கு மனப்பூர்வமான ஒத்துழைப்புத் தந்தாராம் சிவாஜி. அவருக்குக் காட்சிகள் இல்லாத போது கூட, 'என்ன படமாக்குகிறார்கள்; எப்படிப் படமாக்குகிறார்கள்' என்று கவனித்துக் கொண்டிருந்தாராம்.

''இந்தப் படத்தைப் பொறுத்த வரை படத்தின் ஆரம்பத்தில் சொல்வது போலவே, 'தென்றலின் கையைப் பிடித்துக் கொண்டு நந்தவனத்தில் நடந்த திருப்தி' எனக்கு'' என்கிறார் பாரதிராஜா.

பேட்டி: **ப்ரியன்.**

மேலட்டை வண்ணப்படம்: **சங்கர்ராவ்.**

புகைப்படங்கள்: **ரவிஷங்கர் (சுபா).**

# 30,00,000

அன்பர்கள் அன்றாடம்
நரசுஸ் காபியை அருந்துவதே
அதன் தரத்திற்கு சான்று.

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

தெர்மலோ முறை காபி!



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE NCC 2956



பஞ்சாப்
அஸ்ஸாம்
இலங்கைத் தமிழர்
அப்பாடா! வெட்டுச்சத்தம் ஓய்ந்து வோட்டுச் சத்தம் கேக்குது!..
எங்களுக்கே ஓட்!
அகாலி தளம்
எங்களுக்கே ஓட்!
காங்கிரஸ்
ஐக்கிய அகாலி தளம்
தேர்தலை பகிஷ்கரியுங்கள்!
சந்திரஹாஸன் மீது வெளியேற்றத் தடை உத்தரவு வாபஸ்
ரயில் நிறுத்தப் போராட்டம்




# கல்கி

1985 செப்டம்பர் 8
மலர்: 44 இதழ்: 6
குரோதன ஆவணி 23




# நெஞ்சு கொதிக்கிறது! கரம் துடிக்கிறது! அறிவு நிதானிக்கிறது!

பூச்சி மருந்து அடித்துப் புழு பூச்சிகளைக் கொல்வதுபோல் ஈழத் தமிழர்கள் படுகொலைசெய்யப்படுவதைக் காண நெஞ்சு கொதிக்கிறது. "பொறுத்தது போதும் பொங்கி எழுங்கள்" என்று தலைப்பிட்டு, ராணுவத்தை அனுப்புமாறு தலையங்கம் எழுதக் கரம் துடிக்கிறது. ஆனால் அறிவு நிதானிக்கச் சொல்கிறது.

எத்தனையோ பல பிரச்னைகளுக்குப் பொறுமையுடனும் விவேகத்துடனும் ஈடுகொடுத்து வரும் பிரதமர், பதவி ஏற்ற சில காலத்துக்குள்ளேயே பல சிக்கலான பிரச்னைகளைத் தீர்த்து வைத்து பாரத மக்களின் வாழ்த்துக்களைப் பெற்றுள்ள பிரதமர், அனைத்துப் பிரச்னைகளிலும் மிக மிகச் சிக்கலான ஈழத் தமிழர் பிரச்னையுடன் போராடிக் கொண்டிருக்கும்போது அவர் கரத்தைப் பலப்படுத்த வேண்டுமே தவிர, அவருக்குத் தர்ம சங்கடத்தைத் தோற்றுவிக்கும் விதமாக எதையும் யாரும் செய்யக் கூடாது.

இதைப் புரிந்து கொள்ளாததால்தான் சில தமிழீழ விடுதலை இயக்கத் தலைவர்களை நாடு கடத்தி மத்திய அரசு உத்தரவு பிறப்பிக்க நேர்ந்தது. உத்தரவு பிறப்பிக்கப்பட்ட அதே வேகத்தில் சந்திரஹாசனை வெளியேற்றும் ஆணையை ரத்து செய்யவும் பிரதமர் தயங்கவில்லை. இச்செயல்கள், பிரதமரின் பெருந்தன்மையை மட்டுமின்றி சாணக்கியத்தையும் உணர்த்துவன. சந்திரஹாசன், பாலசிங்கம் முதலியோர் பிரதமரிடம் தங்களுக்குள்ள பூரண நம்பிக்கையை வலியுறுத்தி, ஒத்துழைப்புத் தருவதாகவும் அறிக்கைவிட நேர்ந்திருக்கிறது. இன்னமும் பிரதமரின் நல்லெண்ணத்தைப் புரிந்து கொள்ளாதவர் கருணாநிதி ஒருவர்தான்!

ஈழத்தின் மீது படையெடுப்பது என்பது இந்தியாவுக்கு ஒரு பெரிய காரியமல்ல. முப்படைகளுள் ஒன்றின் ஒரு பகுதியை ஏவி விட்டால் போதும், இலங்கைத் தீவு நம் வசப்படும். ஆனால் அது பிரச்னையைத் தீர்க்குமா? இலங்கையை வென்ற பிறகு என்ன செய்வது? இந்தியாவோடு இணைத்துக் கொள்வதா? அல்லது இரண்டாகக் கூறு போடுவதா? அப்படி நாட்டைத் துண்டாடினாலும் அதன் பிறகு அங்கு அமைதி நிலவுமா? சிங்களவரும் தமிழரும் யுத்தத்தில் இறங்காமலிருப்பார்களா? இலங்கைக்குள்ளேயே அகதிகள் பரிவர்த்தனை இல்லாதிருக்குமா? இதைத் தவிர்க்க இந்தியா இலங்கை மீது மேலாதிக்கம் செலுத்தி வருவதா? இதை ஈழத் தமிழர்களே விரும்புவார்களா? தமிழீழத்தை ஆளப் போகிறவர்கள் யார்? ஈழத்தமிழரிடையே ஒற்றுமை நிலவுகிறதா? எந்த விதமாகப் பார்த்தாலும் படையெடுப்பு என்பது அனுசிதமான காரியம் என்பது உணர்ச்சிகளை மூட்டை கட்டி வைத்துவிட்டு யோசிப்பவர்களுக்குப் புரியும்.

மனக்கசப்புக்கள் ரொம்பத்தான் வளர்ந்துவிட்டன என்ற போதிலும் பேச்சு வார்த்தைகள் மூலம்தான் இனியும் தாமதிக்காமல் நிலைமைக்குத் துரிதமாய்த் தீர்வு காணப்பட வேண்டும். பேச்சு வார்த்தைக்கு என்று வந்த பின் திரும்பத் திரும்ப ஒரே கருத்தைக் கூறிக் கொண்டிருப்பதிலும் அர்த்தமில்லை. ஓரளவுக்கு விட்டுக் கொடுக்கத் தயாராக இருந்தால்தான் எதிர்த்தரப்பினையும் தார்மீக அடிப்படையில் விட்டுக் கொடுக்குமாறு வலியுறுத்தச் சக்தி பிறக்கும். பஞ்சாப், அஸ்ஸாம் பிரச்னைகளில் விட்டுக் கொடுக்காமலா ஒப்பந்தங்களைச் சாதித்தார் ராஜீவ்? ராஜீவிடம் நம்பிக்கை வைப்பவர்கள், ஒத்துழைப்புத் தர முன்வருகிறவர்கள் அவரிடம் உள்ள பரந்த மனப்பான்மையைத் தாங்களும் வளர்த்துக் கொள்ள வேண்டும். அதோடு தங்களுக்குள் ஒற்றுமையையும் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மறுபுறத்தில், "ஈழத் தமிழர் பிரச்னைக்குத் தீர்வு காண இந்தியாவின் நல்லெண்ணத்தை முழுதுமாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று உலக நாடுகள் கூறியுள்ள அறிவுரையை ஜெயவர்த்தன அரசும் மதித்து நடந்து கொள்ள வேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

புதிய திட்டங்கள்

# எல்.ஐ.ஸி.
# வழங்கும் புதிய
# 'இரட்டை காப்பு' திட்டங்கள்.

## 'ஜீவன் சாத்தி'
(உயிர் துணை)

இத்திட்டம் குறிப்பாக வேலைக்குச் செல்லும் தம்பதிகளை மனதில் கொண்டு அக் குடும்பங்களின் முழுமையான ஆயுள்



பாதுகாப்பிற்காக உருவாக்கப்பட்டுள்ளது. புனித திருமண உறவு ஒரு தொடர் பந்தம் என்பதற்கு எடுத்துக்காட்டு இத்திட்டம். இத்திட்டத்தின் கீழ் கணவனும் மனைவியும் ஒருங்கிணைந்துதான் பாலிஸி எடுத்துக்கொள்ள முடியும்.

பாலிஸி காலம் நிறைவானதும் அடிப்படை காப்புத் தொகையுடன் போனசும் அளிக்கப்படும்.

பாலிஸி காலத்தில் தம்பதியரில் ஒருவர் காலமாகி விட்டால் அடிப்படை காப்புத் தொகை எஞ்சியவருக்கு அளிக்கப்படுவதுடன் அவர் மேலும் பிரீமியம் ஏதும் கட்டவேண்டியதில்லை.

பாலிஸி கெடு முடிவடைந்ததும் மீண்டும் ஒரு முறை அடிப்படைக் காப்புத் தொகையும் போனசும் வழங்கப்படும்.

பாலிஸி கெடு முடியும் முன் தம்பதியில் எஞ்சியவரும் இறந்துபடின் அவரது வாரிசுக்கு இத்தொகைகள் அளிக்கப்படும்.

## 'ஜீவன் மித்ர'
(உயிர் நண்பன்)

ஒரு குடும்பத்தின் மிகச்சீரிய ஆயுள் பாதுகாப்பிற்காக உருவாக்கப் பட்டிருப்பது இத்திட்டம்.



அமுலில் இருக்கும் ஆயுள் காப்புத்திட்டங்கள் போல், இதிலும் பாலிஸி கெடு முடிவடைந்ததும் அடிப்படை காப்புத்தொகையும் போனசும் அளிக்கப்படுகிறது.

எதிர்பாராமல் கெடு காலம் முடிவடையும் முன்பு பாலிஸிதார் இறந்துவிடில் அவரது வாரிசிற்கு இரட்டை அடிப்படை காப்புத் தொகையும், அடிப்படை காப்பிற்கு உண்டான போனசும் வழங்கப்படும்.

சிறிது அதிக பிரீமியம் செலுத்துவதால் விபத்தில் பாலிஸிதார் உயிர் நீத்தால் அதிக காப்புத் தொகையும் பெற முடியும்.

இந்த 'இரட்டை காப்புத் திட்டங்கள்' பற்றி மேலும் அறிய உங்களது முகவரையோ அல்லது அண்மையில் உள்ள எல். ஐ. ஸி. அலுவலகத்தையோ அணுகுங்கள்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

daCunha/LIC/166/85/TM

# பாரதி புதையல்



# ரூ 2,000 கல்கி - வானதி பரிசுத் திட்டம்



பாரதி நினைவு நாளையொட்டி 'கல்கி' பத்திரிகையும்வானதி பதிப்பகமும் இணைந்து நடத்தும் ''பாரதி புதையல் பெருந்திரட்டு'' வினாடி — வினாப் போட்டி இது.

இப்போட்டியில்

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ | 500 |
| மூன்றாவது பரிசு இருவருக்கு தலா | ரூ | 250 |

போட்டிக் கடைசித் தேதி: நவம்பர் 10உ

கவியரசர் பாரதியின் எழுத்துகள் தமிழ்நாட்டின் பொக்கிஷங்கள்; தமிழரைத் தட்டியெழுப்பித் தமிழுக்கும் தமிழருக்கும், தமிழ்நாட்டுக்கும் புத்துயிர் அளித்தவை.

இந்த நிகரற்ற பொக்கிஷங்களில் நெடுங்காலமாக ஆங்காங்கே பல்வேறு இதழ்களிலும் பிரசுரங்களிலும் புதைந்து கிடந்த பல மணிகளை பாரதி அறிஞர் ரா.அ. பத்மநாபன் ''பாரதி புதையல் பெருந்திரட்டு'' என்ற அரிய நூலில் தொகுத்தளித்துள்ளார். இந்நூலை வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

உயர் ரத்தினங்கள் நிவறந்த இந்தப் புதையலைக் ''கல்கி'' வாசகர்கள் துருவிப் பார்த்து, பாரதியின் பெருமையை மேலும் நன்கு உணரும்படி செய்ய இந்த வினாடி வினா போட்டி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இப்போட்டியில் எவரும் கலந்து கொள்ளலாம். வயது வரம்பில்லை.

கேள்விகளுக்குப் பின் தரப்பட்டுள்ள காலி இடங்களில் விடைகளை எழுதி அனுப்ப வேண்டும். தனிக் காகிதத்தில் கூடாது.

விடைகளை அனுப்பும்போது, விடைகளுடன் ''பாரதி பெருந்திரட்டு'' நூலில் வைக்கப்பட்டுள்ள கூப்பனை அனுப்ப வேண்டும். கூப்பன் இல்லாத விடைகள் கவனிக்கப் படமாட்டா.

விடைகளையும் கூப்பனையும் அனுப்ப வேண்டிய முகவரி:

ஆசிரியர் கல்கி,<br>ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி,<br>சென்னை — 600 032.

உறையின்மேல் ''பாரதி புதையல் போட்டி'' என்று அவசியம் குறிப்பிட வேண்டும்.

இந்தப் போட்டியில் ''கல்கி'' ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

இந்த வினாடி வினாவில் உள்ள எல்லாக் கேள்விகளுக்கும் விடைகள் ''பாரதி புதையல் பெருந்திரட்டு'' நூலில் (தொகுப்பாசிரியர்: ரா.அ. பத்மநாபன், வானதி பதிப்பகம், சென்னை — 17 வெளியீடு. 596 பெரிய பக்கங்கள். ரூ 45/—) உள்ளன.

கேள்விகள்:

1. ''பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானிலும் நனி சிறந்தனவே.''

   இது யாருடைய பாடல்? இதற்கு மூலம் எது?

2. ''எட்டையபுரம் மகாராஜா சுண்டைக் காய் அளவு பூமியை வைத்திருக்கிறார். உலகம் பெரியது. அதிலே எனக்கு இடம் இருக்கிறது என்று அவரிடம் சொல்.

   இவ்வாறு பாரதி கூறியது எப்போது, எந்தச் சந்தர்ப்பத்தில்?



3\. ''பிராமணாலா விடாதே!'' என்ற மராத்தி மொழி உண்டாக்கிய குழப்பம் என்ன? பாரதி எழுத்தில் எதில் வருகிறது?

4\. ''இதைக்குறித்து எழுதினால் பத்திரிகைச் சட்டம் நம்மை அண்டாது. ஆகையால் இதையாவது நம் ஜனங்களுக்குச் சொல்லுவோம்'' என்று பாரதி 'இந்தியா' பத்திரிகை தலையங்கத்தில் குறிப்பிட்டது எப்போது? ''இதையாவது சொல்வோம்'' என்று சொல்லிய விஷயம் என்ன?

5\. ''மெய்த் திருப்பதமே மென்ற போழ்தினும்
இத்திருத் துறந்தே கென்ற காலையும்
சித்திரத் தினலர்ந்த செந் தாமரை
யொத்திருக்குமுகத்தினையுன்னுவாள்''

பிரசித்தி பெற்ற இந்தக் கம்பராமாயணப் பாடலை பாரதி எங்கே கையாளுகிறார்? எதற்காக?

6\. ''ஆனாலும் சோற்றுக்கு மனுஷ்யர்களும் இந்தக் குரங்குகளும் ஒன்றுக்கொன்று பொறாமைப்பட்டும், அடிமைப்படுத்தியும் செய்யும் அநியாயங்கள் வேறெந்த ஜாதியிலும் நான் பார்த்ததே கிடையாது. காக்கை ஜாதியைப் பார், தங்கம்போலே! எல்லாக் காக்கையும் அக்கா வா, தங்கை வா என்று ஒன்றையொன்று கூவி ஒக்க விருந்துண்ணுகின்றன. குரங்கும் மனிதனும் சுத்த அநாகரிக ஜந்துக்கள்!''

இந்த வாக்கியங்களை பாரதி எங்கே எழுதியிருக்கிறார்?

7\. ''இவர் வெடிக்காய் வியாபாரத்தில் சம்பந்தப்பட்டிருக்க மாட்டாரென்பது நமக்கு ஆதிமுதலே நிச்சயம்'' — பாரதி.

''வெடிக்காய் வியாபார''மாவது எது? இந்த ''வியாபாரம்'' செய்திருக்க மாட்டாரென்பது யாரைப் பற்றி?

8\. ''பாரதி புதையல் பெருந்திரட்டு'' நூல் பற்றி ரத்தினச் சுருக்கமான ஒரு விமர்சனம் கீழே உள்ள இடத்தில் தருக:



• ஆர். ஏ. பத்மநாபன்.

கலந்து கொள்பவர்
பெயர் : .......................... வயது: .....

முகவரி: ..........................................
..........................................
..........................................

தேதி:

கையெழுத்து

"ஸ்டே:ப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள்–வசதிக்கு வசதி, சுகத்துக்கு சுகம், விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்கிறேன்"

## பெல்ட் இல்லை, நாடா இல்லை, கவலை இல்லை!



**உரியுங்கள்...ஒட்டுங்கள்:**
இறுக்கமாக அணிந்துள்ள பேன்ட்டியின்மீது ஒட்டுப் பகுதியை வைத்து அழுத்துங்கள்.

ஸ்டே:ப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள் இருக்குமிட்டால், பெல்ட், நாடா, ஊசி, ஹுக் என்று எதைப்பற்றியுமே நான் கவலைப்பட வேண்டியதில்லை. முண்டு, முடிச்சு கிடையாது. வெட்டு, சிராய்ப்பு எதுவுமில்லை. எவ்விதமான அசௌகர்யமும் இல்லை.

ஸ்டே:ப்ரீயில் உள்ள ஒப்பற்ற ஒட்டுப்பகுதி, நேப்கினைக் கச்சிதமாகப் பொருந்த வைக்கிறது. அணிவது சுலபம், மாற்றுவதும் எளிது. சாதாரண நேப்கினைவிட, ஸ்டே:ப்ரீ மிகவும் வசதியானது, சுகமளிப்பது.

ஸ்டே:ப்ரீ என் உடலோடு ஒட்டி உறவாடுவதுடன், உயர்ந்த பாதுகாப்பும் அளிக்கிறது. அதை அணிந்து என் மனம் விரும்பியதைச் செய்யமுடிகிறது. விரும்பியதை அணியவும், கவலையின்றி வெளியில், விரும்பிய இடத்திற்கு சென்றுவரவும் முடிகிறது.

**அதுமட்டுமா? உங்களுக்குத் தேவையான சுகாதாரப் பாதுகாப்பு அனைத்தும் கிடைக்கிறது.**

ஒரு முழு அளவு நேப்கினுள்ள ஸ்டே:ப்ரீயில் அதிக உறிஞ்சும் தன்மை கொண்ட உள்-அடுக்குகள் அமைந்துள்ளன. அத்துடன் 3-வழி சீல் செய்த பிளாஸ்டிக் ஷீட்டும். இருப்பதால் கறை படியுமோ என்ற கவலை ஒருபோதும் இல்லை. மேலும் இதில் அதி மென்மையான விசேஷ ஒன்டர்ராப் அமைந்திருப்பதால் ஈர உணர்வு சிறிதுமின்றி எப்போதும் உற்சாகத்துடன் உங்களால் உலாவ முடிகிறது.

10 அல்லது 20 நேப்கின்கள் கொண்ட பாக்கெட்டுகளாக கிடைக்கின்றன




விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்திட ஸ்டே:ப்ரீ

Johnson & Johnson

# சித்தரஞ்சனி

## சாண்டில்யன்

### 6. வர்ணமேட்டு வேறு!

வாசிஷ்டி நதியில் நீராடப்போய், அதன் குளிர் நீரில் நீந்துகையில் கட்டையொன்று மார்பில் உந்த அந்தக் கட்டையின் மீதே நீந்திக் கரைக்கு வந்து அதை இழுத்துக் கரையில் போட்டதும், அது மனித உடல் என்பதை அறிந்ததால், அதிர்ச்சியையும், அருவருப்பையும் ஒருங்கே அடைந்த கௌதமி புத்ர சதகர்ணி, தலைக்குழலிலிருந்தும், இடையில் உடுத்திய துண்டிலிருந்தும் நீர் சொட்டச் சொட்ட நீண்ட நேரம் அந்த மனித உடலைப் பார்த்துக் கொண்டே நின்றான். அந்தச் சடலத்தின் கழுத்தில் ஆழ்ந்து வெட்டிக் குருதி வந்து உறைந்து போனதைப் பார்த்த அந்த வாலிபன், அந்தக் காயம் தனது கோடாரியால் ஏற்பட்டதென்பதையும், கழுத்திலிருந்து தலைக்கு ஓடும் நரம்பு வெட்டப்பட்டிருந்ததால் மரணம் மிகத் துரிதமாக ஏற்பட்டிருக்க வேண்டுமென்றும் நிர்ணயித்தான். அவ்விதம் இறந்தவன் யாரென்பதைத் தான் அறியக்கூடாது என்பதற்காகவே எதிரிகள் இந்தச் சடலத்தைப் பின்னால் இழுத்து வந்து வாசிஷ்டியில் தள்ளியிருக்க வேண்டுமென்றும், தனது கோடாரியால் யாரும் இறக்கவில்லையென்பதைச் சுட்டிக்காட்டவே கோடாரி மட்டும் தனித்து எடுத்துப் போடப்பட்டிருக்க வேண்டுமென்றும் ஊகித்தான். "ஆனால் ரத்தக் கறைகளை ஏன் அவர்கள் அகற்றவில்லை?" என்றொரு கேள்வியும் எழுப்பிக் கொண்ட கௌதமிபுத்ரன், "அந்த ரத்தக் கறையைப் பிசாசு விளைவித்ததாக நான் நினைக்க வேண்டுமென்று அந்த ராட்சஸ சுஷ்ரபன் எண்ணியிருக்கலாம்" என்று தனக்குச் சமாதானம் சொல்லிக் கொண்டான். இன்னொரு சந்தேகமும் ஏற்பட்டது சாதவாகன வாலிபனுக்கு. தாபோலுக்கு வந்த இரு வீரர்களில் ஒருவன் இறக்க இன்னொருவன் வாசிஷ்டி நதியில் குதித்து மறைந்துவிட, வேறு யார் பிணத்தை எடுத்திருக்க முடியும் என்று தன்னைத்தானே வினவிக் கொண்டு, "நதியில் குதித்தவன் திரும்பி வந்து இந்த உடலை நதிக்கு இழுத்துச் சென்று மறைத்திருக்க வேண்டும்" என்று பதிலும் சொல்லிக் கொண்டான். முந்திய இரவின் கடைசிப் பகுதியில் எத்தனை துரிதமாக இத்தனை காரியங்கள் நடந்திருக்கின்றன என்பதை எண்ணிப் பார்த்த கௌதமிபுத்ரன், பிசாசுக் கதையைக் கூடிய வரையில் நிரந்தரமாக வைத்திருக்கவே அந்தத் தில்லுமுல்லுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதையும், தான் ஒருவன் மட்டும் பிசாசுக் கதையை உடைத்தாலும் பெருவாரியான மக்கள் நம்ப மாட்டார்களாததால் அந்தப் பகுதியிலிருந்து ஓடிவிட்ட குடிமக்கள் திரும்புவது துர்லபம் என்பதையும் சந்தேகமறப் புரிந்து கொண்டான். அதைப் பற்றிச் சில விவரங்களை விசாரிக்கத் தீர்மானித்து, சடலத்தை இழுத்துப் பாறைகளின் நடுவில் மறைத்துவிட்டு மீண்டும் நதியில் நீராடாமல் கடலில் நீராடித் தலைதுவட்டி உடல் துடைத்து ஈர ஆடைகளுடன் தாபிலேசுவரர் ஆலயத்துக்குச் சென்றான். அங்கு வைத்திருந்த தனது தோல் பையிலிருந்து மாற்றுடைகளை அணிந்து திலகம் தீட்டிக் கச்சையில் வாளும் கோடரியும் புனைத்துக் கொண்டு புரவியை அழைத்தான். புரவிக்குச் சேணமிட்டு ஏறிக் கொண்டு அதைப் பூஜாரியிருந்த கிராமத்தை நோக்கி நடக்கவிட்டான்.

வழியெங்கும் அடர்ந்த பெரிய மரங்களும், புஷ்பச் செடிகளும் கொடிகளும் மலைப் பகுதியை அலங்கரித்ததையும், மலையை ஒட்டி வந்த கடல் அந்த மலையில் தாபிலேசுவரரும் சண்டிகாதேவியும் இருக்கிறார்களென்ற காரணத்தால் தனது திரைகளை மலைப்பாதப் பாறைகளில் தாக்கி அர்ச்சனை செய்வதையும் பார்த்து, "இத்தகைய ரமணியமான புனித இடத்தை மனிதன் தனது சுயநலத்துக்காகவும், நாட்டாசைக்காகவும், எத்தனை பாழ்படுத்துகிறான்? ஈசனிருக்கும் புண்யபூமியைப் பிசாசு இருக்கும் இடமாக மாற்றிவிட முயலும் மனித மூளை கேடுகளை விளைவிக்க எத்தனை கூர்மையாக வேலை செய்கிறது?" என்று சிந்தனையில் இறங்கித் துன்பப் பெருமூச்சும் விட்டான். இப்படிப் பற்பல எண்ணங்களுடன் பயணம் செய்த கௌதமிபுத்ரன் பூஜாரியின் குடிஷையை அடைந்ததும், "பூஜாரி, பூஜாரி!" என்று இருமுறை குரல் கொடுத்தும் பூஜாரி வெளியே வராததால் புரவியிலிருந்து இறங்கிக் குடிசைக்குள் நுழைந்தான். அங்கும் பூஜாரியைக் காணாததால் சுற்றுமுற்றும் மலைப்பகுதியிலும், மற்றக் குடிசைகளிலும் தேடினான். அவன் எங்கும் காணவில்லை என்று எண்ணித் திரும்ப முயன்ற சமயத்தில், சற்று எட்ட இருந்த புதரில் யாரோ முனகும் சப்தம் கேட்கவே அங்கு விரைந்து புதரை அகற்றிப் பார்த்தான். அந்தப் புதருக்குள் பூஜாரி நடுக்கத்துடன் படுத்துக் கிடந்தான். அவன் உடலில் ஓரிரு

இடங்களில் ரத்தக்கறையும் இருந்தது. அவன ருகில் உட்கார்ந்து அவன் உடலைப் பரி சோதித்த கௌதமிபுத்ரன் பூஜாரியின் உட லில் காயம் ஏதுமில்லாததைப் பார்த்துப் பூஜாரியைப் பயமுறுத்தவே இந்த ரத்தக் கறை பூசப்பட்டிருக்கிறது என்ற முடிவுக்கு வந்தான்.

அந்த முடிவின் விளைவாகப் பூஜாரியை அகற்றி "உம் எழுந்திரும், உமக்குக் காயம் ஏதுமில்லை" என்று அழைத்தும் பூஜாரி மூடிய கண்ணைத் திறக்காமல், "இங்கிருந்து ஓடிவிடு. இன்றிரவு எப்படியும் பிசாசு உன்னை யும் என்னையும் கொன்றுவிடும்" என்று உளறினார்.

"பயப்பட வேண்டாம் பெரியவரே! எழுந் திரும் நானிருக்கிறேன்" என்று தைரியம் சொன்னான் சாதவாகன வீரன்.

"உன்னால்தான் எல்லாம் வந்தது. நேற்றுக்கு முன்பு பிசாசின் தூதர்கள் யாரும் எனது குடிசைக்கு வந்ததில்லை" என்று நடுக் கத்துடன் சொன்னார் பூஜாரி.

"பிசாசுக்குத் தூதர்களா!" வியப்புடன் வினவினான் கௌதமிபுத்ரன்.

"ஆம்.... ஆம்.... ம்ம்...." குலை நடுக்கத் துடன் கூறினார் பூஜாரி.

"எப்பொழுது வந்தார்கள் உம்மிடம்?"

"நேற்றிரவு இரண்டாவது ஜாமத்தில்."

"எப்படியிருந்தார்கள்?"

"மனிதர்கள் மாதிரி."

"உம். என்ன செய்தார்கள் உம்மை?"

"ஒரு பிசாசு தனது கையிலிருந்து ரத் தத்தை என் மீது பூசியது. இன்னொன்று இந்த ரத்த அடையாளத்துக்குப் பிறகு நீயும் உன் நண்பனும் இங்கிருந்தால் நாளை உங்கள் இரு வரையும் கொன்று போடுவோம். இப் பொழுதே ஓடிவிடு என்று எச்சரித்தது. நான் உடனடியாக இங்கு வந்து மறைந்து கிடந் தேன்."

"ஏன் மறைந்து கிடந்தீர்?"

"உன்னையும் அழைத்துப் போவதற்காக."

"நான் வராவிட்டால்?"

"நான் மட்டும் போய்விடுவேன்."

"எங்கு?"

"இங்கிருந்த அனைவரும் போயிருக்கும் எட்டு இருக்கும் கிராமங்களுக்கு."

இதைக் கேட்ட கௌதமிபுத்ரன் மெல்லப் புன்முறுவல் கொண்டு, "பெரியவரே! நானில்லாமல் வேறு கிராமத்துக்கு போனால் பிசாசு அங்கு வராதா?" என்று கேட்டான்.

"வரும்" என்று நடுங்கும் குரலில் சொன் னார் பூஜாரி.

"நான் இங்கிருந்து கிளம்பப் போவ தில்லை. எதற்கும் நீராடி வாரும். தாபிலேசு வரருக்கு பூஜை செய்துவிட்டு பிறகு என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானிப்போம்" என்று சொல்லியும் பூஜாரி நகர மறுக்கவே, "பூஜாரி! நீராக நீராடி பூஜைப் பிரசாதத்து டன் வருகிறீரா, அல்லது உம்மைக் கட்டித் தூக்கிப் போகட்டுமா?" என்று அதட்டினான்.

வேறு வழியில்லாமல் பூஜாரி தமது குடி சைக்குப் பின்னாலிருந்த ஒரு கிணற்றில் நீராடி னார். அவர் உடலிலிருந்த ரத்தக் கறைகளைக் கௌதமிபுத்ரன் துடைத்துவிட்டான். பூஜாரி நீராடி ஆசார உடை அணிந்து அடுப்பு மூட்டி நிவேதனப் பிரசாதம் தயாரித்து எடுத்துக் கொண்டு கௌதமிபுத்ரனுடன் கிளம்பினார். கௌதமிபுத்ரன் புரவியின் கழுத்தில் சேணத் தைச் சுற்றிவிட்டு பூஜாரியுடன் நடந்தே சென் றான். வழியில் பேச்சுக் கொடுத்துத் தைரிய மும் சொன்னான். "பூஜாரி! தாபிலேசுவர ருக்கு பூஜை செய்யும் உம்மை யாரும் எது வும் செய்ய முடியாது. இங்கு பிசாசு எதுவும் கிடையாது. மனிதர்கள்தான் இந்த நாடகம் ஆடுகிறார்கள். ஆனால் பிசாசை விட மனி தன் மிகக் கெட்டவன். பிசாசு எப்பொழு தாவது யாரையாவது கொல்லும். மனிதன் நாட்டுக்காகப் போர் செய்து பெரும்பான் மையோரைக் கொல்கிறான். நேற்று வந்தவர் கள் சாக வீரர்கள். அவர்களில் ஒருவனை நான் கொன்றுவிட்டேன். அவனை உமக்குக் காட்டுகிறேன்" என்று கூறினான்.

ஆனால் இத்தனைக்கும் பூஜாரி பதில் சொல்லவில்லை. பலிக்குச் செல்லும் ஆடு போல் தாபிலேசுவர் ஆலயத்துக்குக் கௌ தமிபுத்ரனுடன் நடந்தார். அங்கு சென்றதும் வழக்கப்படி தாபிலேசுவரருக்கு அபிஷேகம் செய்து பிரசாத நிவேதனமும் செய்தார். பிறகு பிரசாதத்தைக் கௌதமிபுத்ரனுக்கு அளித்துத் தாமும் உண்டார்.

சுவாமி பிரசாதத்தை உண்டதாலோ அல் லது தெய்வ சந்நிதியிலிருக்கும் காரணத் தாலோ சிறிது அச்சம் நீங்கப் பெற்ற பூஜாரி நிதானமாகப் பேசலானார். "இங்கு நட மாடும் சித்தரஞ்சனிப் பிசாசும் மக்கள் சித் தப் பிரமையில் ஏற்பட்டதல்ல. பலர் அதைப் பார்த்த பின்பு இங்கிருந்து ஓடிவிட்டார்கள். சிலர் அதன் சங்கீதத்தைக் கேட்டு ஓடிவிட் டார்கள்...." என்று துவங்கியவரை இடை மறித்த கௌதமிபுத்ரன், "பிசாசின் சங்கீதம் அத்தனை மட்டமா?" என்று கேட்டான்.

"இல்லை செவிக்கு இனியதுதான். ஆனால் பிராணனுக்கு அபாயத்தை விளைவித்திருக் கிறது. அதைக்கேட்ட ஓரிருவரை அந்த மோகினி கழுத்தைத் திருகிப் போட்டுவிட் டது" என்றார் பூஜாரி.

"அப்படி இறந்தவர்களை நீர் பார்த்தீரா?" கௌதமிபுத்ரன் வினாவைத் திட்டமாகத்



"சார்! 'சின்ன வீடு' செட் அப் பண்ண லாம்னு இருக்கேன். அனுபவஸ்தர் என்ற முறையில் உங்க அட்வைஸ் தேவை!"



"அந்த நடிகையைச் சுற்றி இவ்வளவு கூட்டம் இருந்தும் அவருக்குக் கொஞ்சம் கூட வியர்க்கலையே?"

"எல்லோரும் அவங்க விசிறிகளாச்சே!"

—இளை. அ. கதிர்வேல்.

தொடுத்தான்.

"இல்லை."

"எப்படி உமக்குத் தெரியும்?"

"கேள்விப்பட்டேன்."

"கேள்விஞானமா?"

"ஆம்."

"அது அஞ்ஞானம் பெரியவரே! நமது மக்கள் கதை கட்டுவதிலும் வதந்தியைப் பரப்புவதிலும் கைதேர்ந்தவர்கள். அதை நம்பித்தான் சமுதாயம் கெட்டுப் போகிறது."

இதற்குப் பதில் சொல்லவில்லை பூஜாரி. கௌதமிபுத்ரனும் பதிலை எதிர்பார்க்கவில்லை. பூஜாரியைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு கடற்கரைக்குச் சென்று தான் பாறைகளில் மறைத்திருந்த சடலத்தைக் காட்டினான். "இவன் உம்மைச் சந்தித்த பிசாசுகளில் ஒருவனா?" என்றும் விசாரித்தான்.

"ஆம்" என்று ஒப்புக்கொண்டார் பூஜாரி.

"உங்களைச் சந்தித்த பின்புதான் இவர்கள் என்னைச் சந்தித்தார்கள். ஒருவன் என் கட்டாரியால் இறந்தான். இன்னொருவன் ஓடிவிட்டான். பிசாசாயிருந்தால் கட்டாரியால் இறக்குமா?" என்று கேட்டான் பூஜாரியை நோக்கி.

பூஜாரிக்கு எதுவும் விளங்காவிட்டாலும் பிசாசு பயம் மட்டும் போகாததால் "சித்தரஞ்சனியைப் பற்றி என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"நல்ல அழகி." என்றான் வாலிபன்.

"அவள் சங்கீதம்?"

"சித்தத்தை மயக்குகிறது."

"ஆம். மயக்கும். அதனால்தான் சித்தரஞ்சனி என்று பெயர்."

"அதில் தவறில்லை" என்ற கௌதமிபுத்ரன் "பூஜாரி! அந்த மோகினிப் பிசாசை இன்னொரு ராட்சஸப் பிசாசிடமிருந்து நாம் காப்பாற்றப் போகிறோம்" என்று கூறினான்.

"நாம் என்றால்?" என்று கேட்டார் பூஜாரி.

"நாம் இருவரும்" என்று பதில் சொன்ன கௌதமிபுத்ரன் மேலும் சொன்னான், "பூஜாரி! இந்தப் பகுதியிலிருந்த மக்களெல்லாம் ஓடிவிட்ட பிறகும் உமது பரம்பரைக் கடமையை, தாபிலேசுவரர் பூஜையை நீர் கைவிடவில்லை. இனிமேலும் கைவிட அவசியமில்லை. இத்தனை நாள் உறுதியை இனிமேலும் கைவிடவேண்டாம். உம்மைக் காக்க நானிருக்கிறேன்" என்று தைரியம் சொன்னான்.

"பிசாசிடம் நீ என்ன செய்ய முடியும்?" என்று பூஜாரி கேட்டார்.

"பிசாசு என்னைக் காதலிக்கிறது" என்றான் கௌதமிபுத்ரன்.

"மோகினி அப்படித்தான் காதலிக்கும், பிறகு கழுத்தைப் பிடிக்கும்" என்றார் பூஜாரி நடுக்கத்துடன்.

"நேற்றிரவு பிடித்தது....."

"நினைத்தேன்."

"ஆனால் என்னைக் கொல்லவில்லை."

"ஏன்?"

"என்னிடம் காதலால்."

இதைக்கேட்டதும் ஏதுமே புரியாத பூஜாரி "அடுத்து என்ன செய்ய உத்தேசம்?" என்று கேட்டார்.

"இன்றிரவு மோகினியைச் சந்திக்கப் போகிறேன்". இதை அழுத்தந்திருத்தமாகச் சொன்னான் சாதவாகனன்.

கௌதமிபுத்ரன் தைரியம் பூஜாரியின் அச்சத்தையும் ஓரளவு தவிர்த்திருக்க வேண்டும். "எப்படிப் பார்ப்பதாக உத்தேசம்?" என்று கேட்டார்.

பூஜாரி வியந்து பிரமித்துப் போகும்படியான திட்டத்தைச் சொன்னான் கௌதமிபுத்ரன். அந்தப் பயங்கரத் திட்டத்தைக் கேட்ட பூஜாரி நடுங்கினார். இருப்பினும் கௌதமிபுத்ரன் சொற்படியெல்லாம் கேட்டார். முதலில் கௌதமிபுத்ரன் சித்தரஞ்சனி செய்தி எழுதி வைத்த பாறையைக் காட்டினான். அதன் அருகில் உட்கார்ந்து பழைய செய்தி எழுதியிருந்த இடத்தில் மகரந்தப் பொடி கொண்டு தானும் ஒரு செய்தியை எழுதினான். "குகை வழியை மூடாதே" என்று இரு சொற்களைத் தீட்டினான் பாறையில். அந்தச் செய்தி மீது புஷ்பங்களையும் குவித்தான்.

அந்த இரு சொற்களும் மந்திரம் என்பதை அன்றிரவு பூஜாரி புரிந்து கொண்டார். இரவு மூண்டதும் புரவியைப் பிணைக்காமல் காட்டுக்குள் துரத்திவிட்டு பூஜாரியுடன் எதிரேயிருந்த புதரில் மறைந்து கொண்டான் கௌதமிபுத்ரன். நள்ளிரவும் வந்தது. பிரமிக்கும் நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. சித்தரஞ்சனி வந்தாள், பாறையைப் பார்த்துக் குழப்பத்துடன் நின்றாள். பூக்குவியலைக் கலைத்தாள். லேசாக நகைத்தாள். பிறகு பாடினாள். அதே சித்தரஞ்சனி ராகம்தான். வர்ணமெட்டு மட்டும் வேறு.

(தொடரும்)

# மாகிவிடாது
# களை
# டகிறீர்கள்?"



நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு மிக மதிப்பு.

எந்த வெளியீடுகளின் வாசகர்களின் தரமும், தலையங்கத்திலுள்ள விஷயத்தைப் பெரிதும் பொருத்ததாகும். இந்த விஷயத்தில்தான் டைம்ஸ் குரூப், எப்போதும் முந்தி வருகிறது. அதன் ஆசிரியர் குழு பட்டியல் இந்திய பத்திரிக்கை உலகில் உண்மையிலேயே மிகவும் பிரபலமானவர்களைக் கொண்டுள்ளது.

அதற்கு எழுதுபவர்கள், தாங்கள் தேர்ந்தெடுத்த துறைகளில் மிக கௌரவமானவர்களும், ஆழ்ந்து படித்த எழுத்தாளர்களும் ஆகும். தயாரிப்புத் தரத்திலும், தயாரிப்பு சம்பந்தப்பட்ட மற்ற விஷயங்களிலும் டைம்ஸ் தனித்தன்மை உடையது. டைம்ஸ் குரூப வாசகர்கள் சந்தர்ப்ப வசத்தால் உருவாகியவர்கள் அல்ல. கல்வித்தரம், வேலை, அந்தஸ்து, வருமானம் இவற்றின் அடிப்படையிலே வாசகர்களைச் சம்பாதித்துள்ளது டைம்ஸ்.

**இத்தகைய வாசகர் தரத்தைக் கொண்டுள்ள டைம்ஸ் ஆஃப் இந்தியா குரூப், பொதுமக்கள் தொடர்பு திட்டம் எதற்குமே முதுகெலும்பாகும்.**

## டைம்ஸ் ஆஃப் இந்தியா குரூப் வெளியீடுகள்

போட்டிக் கதை — 2

# நிதர்சனங்களின் தரிசனங்கள்

அந்த ரேஷன் கடையின் முன் நின்றிருந்த க்யூவில் ஆறாவது நபராக நின்றிருந்தான் சந்திரசேகரன் எம். ஏ. வேலையில்லாப் பட்டதாரி.

''டேய் சும்மா சோம்பேறித்தனமாகத் திரிந்து கொண்டிருக்காதே. ரேஷனில் கெரசினும், சர்க்கரையும் கொடுக்கிறார்களாம். போய் வாங்கி வா.''

என்று அம்மா விரட்டினாலும் எட்டு மணிக்குத் திறக்க வேண்டிய கடைக்கு ஏழு மணிக்கே போய் க்யூவில் நின்றுவிட்டான். ஆனால் ஒன்பது மணியாகியும் கடை திறப்பதற்கான அறிகுறியே தென்படவில்லை.

9.15 மணிக்குக் கடைகள் திறக்கப்பட்டன. க்யூ மெதுவாக நகர்ந்தது. பில் போடும் க்ளார்க்கிடம் பணிவாக நின்று பணம் கட்டிவிட்டு, கெரசின் ஊற்றுபவரிடம் போய் அடக்கமாக நின்றார்கள் மக்கள். மூன்று லிட்டர் எனக் கூறி அவர் ஊற்றும் 2½ லிட்டர் எண்ணெயைக் கேள்வி கேட்காமல் வாங்கிக் கொண்டு நகர்ந்தார்கள். சந்திரசேகர் எண்ணெய் வாங்கிக் கொண்டு 'சர்க்கரை பில்' போடும் க்ளார்க் முன் போய்ப் பணத்தை நீட்டினான். இவனிடம் பணத்தைப் பெற்றுக் கொண்ட பின் அவர் 'பில்' போட ஆரம்பித்ததும் அருகில் இருந்த டெலிபோன் அழைக்கவே, அதை எடுத்துக் காதில் பொருத்திக் கொண்டார்.

அமைதியாக நின்று கொண்டிருந்தான் சந்திரசேகர்.

''சரிங்க தலைவரே! இப்போதே அனுப்பிடறேன்!''

''சே,சே, உங்களுக்கு இல்லாததா?'' என்று பேச்சை முடித்தவன், அருகிலிருந்த கூலியாளை அழைத்தான்.

''உடனே அந்தச் சர்க்கரை மூட்டையைக் கொண்டு போய்த் தலைவர் வீட்டில் போட்டுவிட்டு வா. அடுத்த மாதம் அவர் வீட்டில் விசேஷமாம்.''

கூலியாள் மூட்டையுடன் நகர்ந்த பிறகே தன் முன்னால் நின்ற சந்திரசேகரைப் பார்த்தார்.

''இன்னிக்கு ஸ்டாக் முடிஞ்சு போச்சு. அடுத்த வாரம்தான்'' என்றவாறு பணத்





தைத் திருப்பிக் கொடுத்தார்.

அவர் நீட்டிய பணத்தைப் பெற்றுக் கொண்டு பேசாமல் திரும்பினான் சந்திர சேகர்.

''எட்டு மணிக்கு திறக்கப்பட வேண்டிய கடை ஏன் ஒன்பது பதினைந்து வரை திறக்கப்படவில்லை?'' என்று அவன் கேட்கவில்லை.

''இவ்வளவு நேரம் க்யூவில் நின்று வந்தேன். எனக்கு ஸ்டாக் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அந்த மூட்டை சர்க்கரை யாருக்குப் போகிறது?''என்றும் அவன் கேட்கவில்லை.

அவன் படித்த படிப்பு அந்தத் துணிச்சலை கற்றுத் தரவில்லை.

* * * * *

முனியன் வேர்க்க விறுவிறுக்க வங்கியினுள் நுழைந்தபோது மணி ஒன்று ஐம்பத்தைந்து.

நேராகக் கவுண்டரில் போய்த் தன் பாஸ் புத்தகத்தை நீட்டி''நூறு ரூபாய் வேண்டும்'' என்றான்.

'கேஷியர் கணக்கை. முடித்துவிட்டிருப்பாரே' என்று முணுமுணுத்தவாறு, ''காஷியர் பணம் கொடுப்பாரா என்று கேட்டு வா'' என்று அவனை கேஷியரிடம் அனுப்பினார் க்ளார்க்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த கேஷியர், ''ஏன் சார், டைம் ஆகிவிட்டதில்லை? நீங்கள் சொல்லி அனுப்ப வேண்டியது தானே?'' என்று க்ளார்க் மேல் பாய்ந்தவர் அவன் பக்கம் திரும்பினார். ''இன்று முடிந்துவிட்டது. இனி நாளைக்குத்தான்'' என்றார்.

''ஸார், ஸார் ரொம்ப அவசரம். இப்போதே ஊருக்குப் போக வேண்டும். இன்று ஒரு நாள் மட்டும் எனக்காகத் தயவு செய்யுங்கள்'' அவரிடம் பிச்சை கேட்பவனைப் போல் கெஞ்சினான்.

''பிசினஸ் அவர்ஸுக்கு பிறகு செக் பாஸ் செய்யக் கூடாது'' என்று சாக்கு சொன்னார்.

செய்வதறியாது நின்றான் முனியன். அவன் கண்களில் கண்ணீர் மறைத்தது. அவன் அக்கா புருஷனுக்கு உடம்பு சரியில்லை என

**அறிமுக எழுத்தாளர் | சத்யா ஸ்ரீனிவாசன்**

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

அரை மணி நேரம் முன்தான் கடிதம் வந்தது. உடனே போகத் துடித்தான். மாதம் பத்து ரூபாயாகப் போட்டு வங்கியில் இதுவரை நூற்றி இருபது ரூபாய் சேர்த்திருந்தான். கஷ்ட நேரத்திற்கு அது கிடைக்கவில்லை.

அப்போதுதான் அது நடந்தது.

கேஷியரின் காபினுக்குள் அவசர அவசரமாக நுழைந்தார் மானேஜர்.

''ராமகிருஷ்ணன் கேஷ் க்ளோஸ் செய்ய வேண்டாம். எம்.எல்.ஏ. வேலப்பனின் தம்பி வருகிறார். பணம் வேண்டுமாம்.''

''ஸரி ஸார்'' என பதில் வந்தது.

இப்போது மட்டும் எப்படி அவருக்கு பணம் கொடுக்கிறீர்கள்?'' என முனியன் கேட்கவில்லை. அவருக்கு மட்டும் 'பிஸினஸ் அவர்ஸ்' சட்டம்கிடையாதா? எனவும் அவன் கேட்கவில்லை.

ஏனெனில் அவன் படிப்பறிவில்லாதவன், ஏழை!

* * * * *

''ஸ்வாமிகளே! ஸ்வாமிகளே! ஒரு நிமிஷம்.''

சீனு எவ்வளவோ அவசரமாக வந்தும் பிரயோசனப்படவில்லை. அர்ச்சகர் உட் பிராகாரத்தைப் பூட்டிவிட்டு இரண்டாவது வாசற்படியைச் சாத்திக் கொண்டிருந்தார்.

''ஸ்வாமிகளே! நாளைக்கு ஒரு இன்டர் வியூக்குப் போகிறேன், முதல் முறையாக. பெருமாளை ஒரு முறை சேவிக்கணும்.''

''இப்போது நேரமாயிடுத்தேப்பா. சாயங் காலம் வாயேன்.''

''இல்லை ஸ்வாமிகளே! சாயங்காலம் எம்.எல்.ஏ. வீட்டுக்குப் போய்ச் சர்டிபிகேட் வாங்க வேண்டும். ஒரு ஐந்து நிமிடம் கதவைத் திறவுங்கள் போதும். பெருமாளைப் பார்த்து விட்டுப் போய்விடுகிறேன்.''

''உனக்குத் தெரியாதா என்ன? சன்னதியை ஒரு முறை மூடிவிட்டால் மீண்டும் சாயங்காலம்தான் திறக்க வேண்டும்'' என்று சாஸ்திரம் கூறினார்.

அந்தப் பெருமாளிடம் அவனுக்கு அளவற்ற பக்தி. எஸ்.எஸ்.எல்.ஸி. ரிஸல்ட் வந்த போது அதைப் பார்த்த உடன், பேப்பரும் கையுமாக அவன் ஓடிய இடம் கோவில்தான். ஆனந்தம் பொங்கப் பெருமாளைப் பார்த்த வண்ணம், ''கடவுளே! நான் பாஸ் செய்து விட்டேன்'' என்றான் மானசீகமாக.

அவ்வளவு ஏன்? பக்கத்து வீட்டு சாந்தா அவனைப் பார்த்து அடிக்கடி புன்னகைபுரிந்த போதும், ஏதாவது சாக்கிட்டு அவனைப் பார்க்கச் சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டதும், அவன் மனத்தில் அரும்பிய இனிமையான நினைவுகளை நாணத்துடன் பெருமாளிடம்தான் கூறி நின்றான்.

அவ்வளவு பக்தியுள்ள அவனுக்காகக் கோவில் கதவுகள் திறக்கப்படவில்லை. சீனு ஏமாற்றமடைந்தான்.

அப்போதுதான் அது நடந்தது.

''சாமி, சாமி'' என்று அழைத்தபடி வேகமாக வந்தான் கோவில் காவல்காரன்.

''கோவிலை மூடாதே! நம் எம்.எல்.ஸி.




## உள்ளத்தை உலுக்கிய நிகழ்ச்சி

**போட்டி: 19**

சமீபத்தில் உங்கள் மனத்தை உலுக்கிய ஒரு நிகழ்ச்சியை உருக்கமாக எழுதி வாசகர்களைக் கண் கலங்கச் செய்யுங்கள் பார்ப்போம். கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும். பிரகாரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்! உறையின் மீது ''உள்ளத்தை உலுக்கிய நிகழ்ச்சி'' என்று குறிப்பிடுதல் அவசியம்.

**முடிவு தேதி: 23.9.85**

**34 வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் காத்திருக்கின்றன. வாராவாரம் போட்டியில் பங்கேற்றால் ஒன்று கிடைக்காமலா போகும்? விடா முயற்சியுடன் செயல்படுங்கள்!**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

# அருள்வாக்கு



ஹார்மோனியத்திலும்நாயனத்திலும்,புல்லாங்குழலிலும்காற்றைப்பலவிதமாக அளவுபடுத்திச் சில இடைவெளிகளால் விடுகிறதால்தானே சப்தம்உண்டாகிறது? நம்தொண்டையிலும் அப்படிப்பட்ட அமைப்பு இருக்கிறது. தொண்டை மட்டுமில்லை. நாபிக்குக் கீழேமூலாதார ஸ்தானத்திலிருந்து, சுவாஸம் என்கிற காற்றின் கதியைப் பல தினுசில் அளவுபடுத்திக் கொண்டு வருவதால்தான் நாம் பேசவும் பாடவும் முடிகிறது. பகவான் பண்ணின இந்த மனுஷ்ய வாத்தியம், ஹார்மோனியம், நாயனம் முதலியவற்றை விட சிரேஷ்டமானது. எப்படியென்றால், அவற்றில் வெறும் ஒலிகளை மட்டுந்தான் எழுப்ப முடியும். அ, க, ச, ங மாதிரியான அக்ஷரங்களை எழுப்ப முடியாது. மனுஷ்யனுக்கு மட்டுமே இந்தத் திறமை இருக்கிறது. மிருகங்களும் கூட ஏதாவது ஓரிரண்டு விதமான சப்தங்களைத்தான் போட முடிகிறதே தவிர, இப்படி இத்தனை ஆயிரம் அக்ஷரங்களை எழுப்ப முடியாது.

மனுஷ்யனுக்கு மட்டுமே இந்த ஆற்றலை ஈச்வரன் தந்திருக்கிறான் என்பதாலேயே அதன் முக்கியத்வத்தை அறியலாம். இவ்வளவு முக்கியமான ஒன்று, இப்போது நாம் பண்ணுகிற மாதிரி விருதாப் பேச்சில், அரட்டையில் வீணாகக் கூடாது. இதை வைத்துக் கொண்டு வேத சக்திகளைப் பிடிக்க வேண்டும்; உலக நலனை உண்டாக்க வேண்டும்; நம் ஆத்மாவை உயர்த்திக் கொள்ள வேண்டும், இந்த மூன்று காரியங்களையும் செய்யும் சப்தங்களாகத்தான் வேத மந்திரங்களை ரிஷிகள் பிடித்துக்கொடுத்திருக்கிறார்கள். இதைப் புரிந்து கொண்டால் உச்சாரணத்துக்கே இத்தனை மதிப்புக் கொடுத்து சிக்ஷாசாஸ்திரம் என்ற ஒன்று ஏன் ஏற்பட்டிருக்கிறது என்பது புரியும். அதிலே ரொம்பவும் நுணுக்கமாக (மைன்யூட்டாக) இன்றைய பாஷா சாஸ்திர நிபுணர்களும் ஸயன்டிஸ்ட்களும் கூட ஆச்சரியப்படும்படியாக, அடிவயிற்றிலிருந்து ஆரம்பித்து இன்னின்ன மாதிரிக் காற்று புறனும்படியாகப் பண்ணி, அது இன்னின்ன இடத்திலே பட்டு, வாய் வழியாக இப்படியிப்படி வர வேண்டும் என்று அக்ஷரங்களை அப்பழுக்கில்லாமல்(அக்யூரேட்டாக)நிர்ணயம் பண்ணிக் கொடுத்திருக்கிறது.

காற்றானது இப்படி நமக்குள்ளே பலவிதமாகச் செல்கிற போது அதுவும் ஒரு தினுசில் யோக சாஸ்திரமாகவே ஆகிறது.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

யோட அம்மாவும் சம்சாரமும் வந்துன்னு இருக்காங்க.''

''அப்படியா?'' என்ற அர்ச்சகர் முகத்தில் மகிழ்ச்சி தெரிந்தது.

''சரி, சரி, எல்லா லைட்டையும் போடு'' என்றவர் மீண்டும் பூட்டிய கதவுகளைத் திறக்கத் தொடங்கினார்.

'இப்போது உங்கள் அவசரம். அந்த சாஸ்திரம் எல்லாம் என்னவாயிற்று?'என்று சீனு கேட்டுக் கொண்டிருக்கவில்லை.

* * * * *

வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து ஐந்து வருடங்களாகியும் ஒரு இண்டர்வியூ கூட கிடைக்கப் பெறாத கிருஷ்ண குமார், மீண்டும் தன் பெயரைப் புதுப்பிக்க வந்திருந்தான். அன்றைய உணவான இருபத்தஞ்சு பைசா வேர்க்கடலையை மென்றவாறு ஆலமரத்தடியில், தன் பெயர் அழைக்கப்படுவதற்காகக் காத்திருந்தான். அவன் வாய் அடிக்கடி, 'நம் மக்கள் எல்லாருமே கோழைதான் 'மகா கோழைகள்' என்று முணுமுணுத்தவாறு இருந்தது.

மேலே கூறப்பட்டுள்ள மூன்று சம்பவங்களுக்கும் அவன் சாட்சியாக இருந்தான். சந்திரசேகருக்காக, முனியனுக்காக, சீனுவுக்காக அவன் பரிதாபப்படவில்லை. மாறாக அவர்கள் மீது கோபமே கொண்டிருந்தான்.

திடீரென அவனுக்கு ஓர் உண்மை புலப்பட்டது. மக்களில் எல்லோருமே கோழைகளல்ல. ஒரே ஒரு சதவீதத்தினர் நாட்டிலுள்ள மற்ற தொண்ணூற்றொன்பது சதவீதத்தினரைக் கோழைகளாக்கியுள்ளனர். அவர்கள் அரசியல்வாதிகள்.

ஒரு முடிவுடன் எழுந்தான் கிருஷ்ண குமார்.

நேரே எதிரேயிருந்த மா. தோ. ஊ. கட்சி அலுவலகத்தில் புகுந்து தன்னை உறுப்பினனாக்கிக் கொண்டான். இனி அவனுக்கு வேலை வாய்ப்பு அலுவலகத்தின் தயவு தேவையில்லை. பத்தே வருடங்களில் —

அவன் வீட்டைத் தேடிச் சர்க்கரை மூட்டைகள் வரும்!

அவன் போகாமலேயே பாங்கிலிருந்து பணம் வீட்டுக்கு வரும்!

கோவில் கதவுகள் அவன் குடும்பத்தினருக்காக எப்போதுமே திறந்திருக்கும்!

நீரைக் கோதிக்க வைத்தல், பாட்டிலை
கிருமி நீக்கம் செய்தல், வெப்பநிலை சோதனை
செய்தல்—ஆகிய பிரச்சனைகள் இல்லை.



புதிதாகப் பிறந்த குழந்தை உணவைப் பெற்றிட எத்தகைய சுலபமான, வசதியான, இயல்பான வழி இருக்கிறது பார்த்தீர்களா?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயல்பாக நடந்த நீண்ட சோதனை கணிப்பின் மூலம் இயற்கை கண்டு கொண்டுள்ளது:

குழந்தைக்கான தாய்ப்பாலை உன்னத உணவாக்குபவை அதில் இயல்பாக சரிவிகிதமாகக் கலந்துள்ள உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்தி தரும் சத்துக்கள் (கார்போ ஹைட்ரேட்டுகள், கொழுப்பு) ஆரோக்கியமான பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகும்.

## தூய்மைக்கேடு பிரச்சினை இல்லை.

உங்கள் குழந்தை, முலையிலிருந்து பாலை நேரடியாக குடிப்பதால் தூய்மைக்கேடு ஏற்படும் அபாயம் அதில் இல்லை, தயாரிப்பு அல்லது பாலின் வெப்பநிலையை சோதித்தல் போன்ற பிரச்சினைகளும் அதில் இல்லை. அத்துடன் வயிற்றில் வாயுக்கோளாறுகள் மற்றும் இதர நோய்களிலிருந்து உங்கள் குழந்தையை பாதுகாத்திட தாய்ப்பாலில் நோய் எதிர்ப்புப் பொருள் இயல்பாகவே உள்ளது —இன்னும் இதர நன்மைகள்கூட அதிலே —உதாரணம் ஸ்கர்வியைத் தடுத்திட வைட்டமின் 'சி'. முலைப்பால் உண்ட குழந்தை பாதுகாப்பும் தன்னம்பிக்கையும் பெறுகிறது. காரணம் நீங்கள் குழந்தையை அரவணைத்து பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## நாளும் பிரபலமடைகிறது

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேல் நாடுகளிலும்கூட முலைப்பால் கொடுத்தல் மிக அதிகமாக பிரபலமாகி வருகிறது.

## உலகளாவிப் பிரபலமடைகிறது.

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றாக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்கமுடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே–நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போ ஹைட்ரேடுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

## தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**
இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல். தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.

ASP/AS-TAM6/83



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

அதிர்ச்சித் தொட...

# G.Hல் தண்ணீ...



* சட்டியில் இருந்தால்தானே...

**ஜி.** ஹெச் என்று சொல்லப்படும் சென்னை பொது மருத்துவமனைக்குள் நாங்கள் நுழைந்தபோது, பிற்பகல் மணி மூன்று. உள்ளே நுழையும்போது, ஒரு மெட்ரோ வாட்டர் லாரி தண்ணீர் சப்ளை செய்துவிட்டு வெளியே வந்து கொண்டிருந்தது.

ஒரு கையில் ஃப்ளாஸ்க்குடன் வந்து கொண்டிருந்த வயதான 'செங்கையா'வுடன் பேசினோம். "தண்ணீர் சரிவரக் கிடைப்பதில்லையாமே!" என்றதும், "அதை ஏங்க கேட்கிறீங்க? காலைல ஆறு மணியிலிருந்து ஏழரை, எட்டு வரை தண்ணீர் வரும். மறுபடி பன்னிரண்டிலிருந்து இரண்டு வரை. அப்புறம் நாலுலேயிருந்து அஞ்சரை, ஆறு வரைக்கும். தண்ணீர் விடற சமயத்துலகூட கொஞ்சம் கொஞ்சமாத்தான் வரும். அதுக்கும் கூட க்யூதான். ரொம்பக் கஷ்டமா இருக்குதுங்க சார்!" என்றதோடு, இன்னொரு கையிலிருந்த கூஜாவைத் திறந்து காட்டி, "வார்டுல தண்ணீர் இல்லை; அதான் டீக்கடைக்கு வந்து, கெஞ்சிக் கூத்தாடி, கொஞ்சம் தண்ணீர் வாங்கிட்டுப் போறேன்," என்று பரிதாபமாகச் சொன்னார்.

ஒரு வார்டுக்குள் நுழைந்தோம். ஒரு சின்னப்பையன் வாந்தி எடுத்துக் கொண்டிருந்தான். அவனது தாய் ஒரு கையால், பையனின் தலையைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையால் கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த பாட்டிலை எடுத்தார். பாட்டிலில் தண்ணீர் இல்லை. குழாயில் வராத நேரம் அது. பையனை அப்படியே உட்கார வைத்துவிட்டு; பாட்டிலுடன் போய், "தண்ணி இருக்கா!" என்று ஒவ்வொருவரிடமாகக் கேட்டுக் கடைசியில் கொஞ்சம் தண்ணீருடன் வந்தாள். பையனின் வாயைக் கழுவி, முகத்தைத் துடைத்துவிட்டார். பார்ப்பதற்கே கஷ்டமாக இருந்தது.

இன்னொரு வார்டில் இருந்த நோயாளியின் உறவினரிடம் பேச்சுக் கொடுத்த போது, "போன வாரம் என் சொந்தக் காரரை அட்மிட் பண்ணினேங்க. அப்போ, தண்ணீர்க் கஷ்டம் பற்றித் தெரியாது. திண்டாடிப் போயிட்டோம். அன்னிக்கு சவினிங்கே வீட்டுக்குப் போய், வாட்டர் இரண்டு பாட்டில்கள் எடுத்துக்கிட்டு வந்துட்டோம்," என்றார்.

ரெட் ஹில்ஸ் பக்கத்திலிருந்து வெங்கடேசனும் அவர் மனைவி சுலோசனாவும் ஒரு நோயாளியைப் பார்ப்பதற்காக வந்திருந்தனர். கூட இரண்டு சிறுசுகள். கையோடு டிபன் கேரியரில் சாப்பாடு கொண்டுவந்திருந்தனர். பிள்ளைகள், "அம்மா பசி. சாப்பாடு குடு!" என்று



நச்சரித்துக் கொண்டிருந்தனர். நச்சரிப்புத் தாங்காமல் அம்மா குழந்தைகள் மீது எரிந்து விழ, அப்பா இரண்டு மொத்து மொத்த, ஓ... என்று அழ ஆரம்பித்து விட்டனர்.

நாங்கள் போய் விசாரித்தோம். வெங்கடேசன், ''இப்ப தண்ணி வராத நேரம்.. இப்பப் போய்ச் சாப்பாட்டுக் கடையை ஆரம்பிக்கலாமா? அப்புறம் தண்ணிக்கு எங்க போறது? இன்னும் ஒரு அரை மணி பொறுத்தா தண்ணீர் வரும், சாப்பிடலாம். அது புரியாமல் அவசரப்படுதுங்க!'' என்றார். இப்படியும் ஒரு பரிதாபக் கதை.

ஒவ்வொருவரும் கறுப்பு மற்றும் வெள்ளை நிற கேன்களைக் கையில் பிடித்துக் கொண்டு தண்ணீருக்காக அலைந்து கொண்டிருப்பதைப் பார்த்த போது, நமக்கே, இருக்குமிடம் ஆஸ்பத்திரியா அல்லது ரேஷன் கடையா என்று சந்தேகம் வந்துவிட்டது. தண்ணீர் வருகிற போது பிடித்து வைத்துக் கொண்டுவிட வேண்டும். இல்லையெனில் திண்டாட்டம் தான்; தவிக்க வேண்டியதுதான்.

குடிதண்ணீருக்குத்தான் இந்தக் கதி. டாய்லட் போன்றவற்றில் தண்ணீர் வசதி எப்படி? தன் இளைய மகனை ஆஸ்பிடலில் சேர்த்துள்ள வடசென்னைவாசி ஒருவரின் அனுபவம்: ''பொதுவாகத் தண்ணீர் வந்து கொண்டுதான் இருக்கிறது என்றாலும் குழாய்த் தண்ணீரையே நம்பிக் கொண்டு போக முடியாதுங்க. நாமே தண்ணீர் எடுத்துக் கொண்டு போயிடறதுதான் நமக்கு நல்லது.''

ஏன் இந்த அவல நிலை? இத்தனைக்கும் ஜி. ஹெச்சில் ஒரு மேல் மட்டத் தொட்டி, ஒரு கீழ் மட்டத் தொட்டி என இரண்டு தண்ணீர்த் தொட்டிகள் உள்ளன. இவற்றின் மொத்தக் கொள்ளளவு சுமார் ஐந்து லட்சம் காலன். ஆனால் இந்த அளவுக்கு 'சப்ளை' கிடையாது. 'சட்டியிலிருந்தால்தானே அகப்பையில் வரும்?' என்பது பழமொழி. 'தொட்டியில் இருந்தால்தானே குழாயில் வரும்?' என்பது இன்றைய ஜி. ஹெச் மொழி.

ஜி. ஹெச்சில் தண்ணீர் சம்பந்தமான பணிகளைக் கவனித்துக் கொள்வதற்கென்றே

# ரீப் பஞ்சம்





* வீணாகும் தண்ணீர்.

ஒரு தனி அலுவலகமும், அலுவலர்களும் இருக்கிறார்கள். அங்கே சென்றோம். ஒரு பெரிய குழாயிலிருந்து தண்ணீர் வாரி அடித்துக் கொண்டிருந்தது. தண்ணீர் வீணாவது பற்றி யாருமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஒரு பக்கம் தண்ணீர்ப் பஞ்சம் மறு பக்கம் இப்படியா என்று நமக்கே வியப்பாக இருந்தது.

தவிர ஜி. ஹெச் காம்ப்பௌண்டினுள் ஒரு கிணறு இருக்கிறது. இது சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு தோண்டப்பட்டதாம். தண்ணீர் கெட்டுப் போய்விட்டது. அதாவது, குடிக்க லாயக்கில்லாதது என்பது மட்டுமில்லை; மற்றப்படி உபயோகிக்கவும் நல்லதில்லை என்பதை ஒரு டாக்டரே ஒப்புக் கொண்டார். காரணம் என்ன? பக்கத்தில் பெருக்கெடுத்தோடுகிற கூவம் என்கிற 'புனித' நதியின் எஃபெக்ட் இத்தண்ணீரிலும் கலந்திருப்பதுதானாம். இந்தக் கூவம் விஷயம் காரணமாகத்தான், ஜி. ஹெச் காம்பௌண்டுக்குள் இனிமேல் புதுக் கிணறு தோண்டுவது கூடப் பயனற்ற வேலை என்கிறார்கள்.

பொதுவாகவே மின்சாரம் போன்ற மற்றவற்றை விடத் தண்ணீரின் தேவை அவசியம் என்பதும் அதிகம் என்பதும் அனைவருக்கும் தெரிந்ததுதான். அதிலும் ஆஸ்பத்திரிகளில் தண்ணீரின் அவசியம் பற்றிச் சொல்லவே வேண்டாம். மேலும் சென்னையிலுள்ள மிகப் பெரிய மருத்துவமனையான ஜி. ஹெச் என்றால் கேட்கவே வேண்டாம்.

இங்குள்ள டிபார்ட்மெண்டுகள் எத்தனை? ஒற்றைத் தலைவலி முதல், எஸ். டி. டி. வகையறா வியாதிகள் வரை பலவிதமான நோய்களுக்காகவும் இதன் பல்வேறு பகுதிகளுக்கு வரும் இன் — பேஷண்ட்டுகள் எத்தனை பேர், அவுட் — பேஷண்ட்டுகள் எத்தனை பேர் என்றெல்லாம் கணக்குப் போட கம்ப்யூட்டருக்குக் கூடச் சில விநாடிகள் பிடிக்கும்.

மேலும் தினமும் இங்கே நடைபெறுகிற ஆபரேஷன்கள் எத்தனை?

இவை எல்லாவற்றுக்குமாக, ஜி. ஹெச்சின் தினசரித் தண்ணீர்த் தேவை எவ்வளவு?

தற்போது கிடைக்கிற தண்ணீர் எவ்வளவு?

ஏன் இந்தப் பற்றாக்குறை? இதைப் போக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

இவற்றையெல்லாம் அறிய விரும்பி, மருத்துவமனையின் தலைவர் (டீன்) டாக்டர் ஆறுமுகத்தைச் சந்தித்தபோது, அவர், "எனக்கு இதுபற்றியெல்லாம் பத்திரிகைகளுக்குப் பேட்டி தர உரிமை இல்லை. நல்வாழ்வுத்துறை அமைச்சரைச் சந்தியுங்கள்" என்று சொல்லி விட்டார்.

* செங்கையா: "அதை ஏங்க கேட்கறீங்க?"



1985ம் ஆண்டின் ரிசர்வ் வங்கி காலண்டரை உலகத்தின் தரமான 15 காலண்டர்களில் ஒன்றாக, நியூயார்க் நகரத்தின் "க்ரியேடிவிடி 85" தேர்ந்தெடுத்திருக்கிறது!

— கலாமூர்த்தி.

சரி என்று அமைச்சர் ஹண்டேயை, நுங்கம்பாக்கத்திலுள்ள அவரது வீட்டில் சந்தித்துக் கேட்டோம்.

ஜி. ஹெச்சின் ஒரு நாளைய தண்ணீர்த் தேவை எவ்வளவு?"

"சுமார் மூணு லட்சம் காலன்கள்" (1 காலன் = 4.5 லி)

"இப்போதைய சப்ளை?"

"சுமார் 85,000 காலன்கள்."

"ஏறத்தாழத் தேவையில் இது கால் பங்கு தானே? இது போதுமா ஜி. ஹெச் போன்ற பெரிய ஆஸ்பிடல்களுக்கு?"

"போதாதுதான். ஆனாலும் என்ன செய்ய? எல்லா இடங்களிலுமே பற்றாக்குறை. போதாக்குறைக்குப் பருவமழை வேறு இல்லை. சொல்லப் போனால் நியூராலஜி, கார்டியாலஜி போன்ற பிரத்தியேகப் பிரிவுகள் எல்லாம் கட்டப்படு முன்பு மூணு லட்சம் காலன் தண்ணீர் கிடைத்து வந்தது. இன்று, ஏகப்பட்ட பிரிவுகள், நோயாளிகளின் எண்ணிக்கையும் பல மடங்கு பெருகிவிட்டது. ஆனாலும் 85,000 காலன்கள் தான் கிடைக்கிறது தினமும். இப்போதாவது கொஞ்சம் பரவாயில்லை. சில மாதங்களுக்கு முன்னால் நிலைமை படுமோசம்."

"இது எப்படியாவது தீர்க்கப்பட வேண்டிய விஷயமில்லையா?"

"எஸ். யூ ஆர் கரெக்ட்!"

"இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?"

"மெட்ரோ வாட்டர் லாரிகள் மூலமாகத் தினமும் சுமார் 20,000 காலன் தண்ணீர் வருகிறது. கீழ்ப்பாக்கம் தண்ணீர்த் தொட்டியிலிருந்து நேரிடையாகத் தண்ணீர் பெறுகிற சாத்தியம் பரிசீலனையில் இருக்கிறது. தவிர, போர்ட்டிரஸ்ட்டின் (தண்ணீர்) மெயின் லைனிலிருந்து, நேரிடையாகத் தண்ணீர் சப்ளை பெறவும் முயற்சி பண்ணுகிறோம்" என்று புள்ளி விவரங்களை அடுக்கிக் கொண்டே போனார் அமைச்சர்.

நமக்கென்னவோ, தண்ணீர் தாராளமாகக் கிடைக்க வழி செய்தால் ஆஸ்பத்திரி தூய்மையாகும். அதனாலேயே பாதி வியாதிகள் குணமாகிவிடும் என்று பட்டது.

தமிழகத்தில் 'தண்ணி' தட்டுப்பாடின்றிக் கிடைக்கச் செய்திருக்கும் (அண்ணாவின் வழி நடக்கும்) புரட்சித் தலைவரின் அரசாங்கம், தண்ணீர்த் தட்டுப்பாடும் இல்லாமல் பார்த்துக் கொண்டால் நல்லது. செய்வார்களா?

— சந்திரமௌலி

படம்: தாமு

"கண்ணன் சார்! பந்தயத்திலே தோற்றால் நான் சொன்னதை கேட்–கிறதா சொல்லியிருக்கீங்க.... நீங்க இங்கேயே இப்பவே இத்தனை பேர் எதிரிலும்ஒருபக்கத்துமீசையைஎடுக்க வேண்டும்!"

# மீசை

'சாரதா'

மணி மாலை ஐந்து.... கண்ணனுக்குத் தலையை வலித்தது. இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறதே..... கம்ப்யூட்டர் ரூமை விட்டு வெளியே வந்தான். அவன் போதாதவேளை... ஜெயராமனிடம் தானாகவே மாட்டிக் கொண்டான்.

"ஜெயராம்.... தலையை வலிக்கிறது. கான்டீனில் போய்க் காப்பி சாப்பிடலாம் வா."

"கண்ணன் சார்! எங்களுக்குக் காப்பி கிடையாதா?" சுகுணா, மைதிலி இருவரும் கேட்டனர்.

கண்ணன் பதிலுக்கு, "காப்பி அனுப்பி வைக்கிறேன்...." எனக் கூறிவிட்டு, "ஜெயராம்.... எழுந்திருடா....." என்றான். ஜெயராமன் சீட்டை விட்டு எழுந்திருக்காமலேயே,

"மேடம், கவனிச்சீங்களா.... கண்ணன் மனைவியை டெலிவரிக்குக் கொண்டு விட்டு விட்டு வரும் பொழுது மீசையோடு வந்திருக்கிறான்...." – சுகுணாவைப் பார்த்துக் கூறினான்.

சுகுணா, "கண்ணன் சார்! எங்கள் தலை இன்னிக்கு லீவு." (தலை என்பது செக்ஷன் ஹெட்) "காப்பியை இங்கேயே வரவழைத்துக் குடிக்கலாமே" என்றாள்.

"சரி" என்று செக்ஷனுக்குள் நுழைந்து காலியான நாற்காலியில் அமர்ந்து கொண்டான். ஜெயராமனும், மிஸஸ் சுகுணாவும் (ரகசியமாக) தாழ்ந்த குரலில் பேசிக் கொண்



வதைப் பார்த்து, ஏதோ சிக்கலில் மாட்டிக் கொள்ளப் போகிறோம் என்ற நினைவில் சிக்கியிருந்த கண்ணனைப் பார்த்து, மைதிலி சிரித்தவாறே கேட்டாள் —

"என்ன சார், கம்ப்யூட்டர் வேலை எல்லாம் முடிஞ்சாச்சா?"

"இன்னும் இல்லை...." கண்ணனைப் பேச விடாமல் இடை புகுந்தாள் சுகுணா.

"அவருக்கு எங்கேடி நேரம்..... கலெக்டர் அறைக்குப் போய் வரவே நேரம் போத வில்லை.... இவர் என்னிக்கு கம்ப்யூட்டரை இயக்கி ப்ரோக்ராம் போட்டுக் காட்டப் போகிறார். இவருக்குப் பிரத்யேக டிரெயினிங் ரூ 1500, தில்லி செமினாருக்கு ரூ 2000 எல்லாமே தண்டம்.... நாலு மாசமா 'இதோ இதோ முடிஞ்சிடும்' என எல்லோரையும் ஏமாத்துகிறார்."

ஜெயராமன் தனது நாற்காலியில் கழண்டிருந்த ஸ்க்ரூவைத் திருகியபடியே —

"என்ன மேடம்.... தலைவலி என்று வந்தவனை இழுத்து உட்கார வச்சுக் கிண்டலா பண்றீங்க. நாய் மாதிரி லோ... லோனு அலையறான் பாவம்" என்றான்.

"சும்மா ஏ. ஸி. ரூமில் படுத்துத் தூங்கினால் தலைவலிதான் வரும்.... ஏதாவது ஒரு ப்ரோக்ராம் போட்டுக் காண்பிக்கட்டும். பார்க்கலாம்" என்று சுகுணா பதிலளித்தாள்.

கண்ணனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. நல்லவேளை காப்பி வந்தது. எல்லோரும் அருந்தினர்.

"ஜெயராமன் சார்....! இவர் டிரெயினிங் போய் வந்து செய்யாததை நான் டிரெயினிங் போகாமலேயே செய்து காட்டுகிறேன்..." சுகுணாவின் சவாலுக்கு, காப்பி சாப்பிட்ட தெம்பில் எதிர்ச் சவால் விட்டான் கண்ணன்.

"சரி மேடம், ஒரு ஃப்ளாப்பி கொடுக்



"நாலு வருஷத்துக்கு முன்னாலே என் வீட்டு மாடிப் போர்ஷனை ஒரு வக்கீலுக்கு வாடகைக்கு விட்டேன்...!"

"ஓஹோ! இப்போ காலி பண்ண மாட்டேங்கிறாரா?".

"ஊஹூம். நான்தான் இப்போ வாடகை கொடுத்துக்கிட்டிருக்கேன்...!"

— அ. தெய்வசிகாமணி.

கிறேன். அதில் என்ன பதிவாயிருக்கு என்பதைக் கம்ப்யூட்டர் ஸ்க்ரீனில் போட்டுக் காட்ட முடியுமா?'

"சரி, என்ன பந்தயம்?"

கண்ணன் யோசனை செய்தான், பிறகு,

"இன்று ஐந்தரை மணியிலிருந்து ஆறு மணி வரை நீங்கள் சொன்னபடி கேட்கிறேன்" என்றான்.

எல்லோரும் கம்ப்யூட்டர் ரூமுக்குப் போனார்கள். சுகுணா கம்ப்யூட்டர் முன்பு அமர்ந்து, கண்ணன் கொடுத்த ஃப்ளாப்பியை, டிரைவில் பொருத்திவிட்டு, **DIR** என டைப் செய்து **(CR)**— ஐ பிரஸ் செய்தாள்.

மடமடவென அந்த ஃப்ளாப்பியிலிருக்கும் ஃபைல்களின் பெயர்கள் ஸ்க்ரீனில் வந்தன. எல்லோரும் கைதட்டினர். கண்ணன் கர்ச்சீப்பால் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

"கண்ணன் சார்.... மணி ஐந்தரை. நீங்க இங்கேயே, இப்பொழுதே ஒரு பக்கத்து மீசையை எடுக்க வேண்டும்..." சுகுணா மைதிலி இருவரும் சேர்ந்து கூறினார்கள்.

கண்ணன் ஜெயராமனைப் பார்த்து அசடு வழிய நெளிந்தான்.

"மேடம், ப்ளீஸ்! எல்லோருக்கும் ஸ்வீட், காரம், காப்பி வாங்கித் தருகிறேன். ஹோட்டல் சூரியாவுக்கு அழைத்துப் போகிறேன்" கண்ணன் சுகுணாவிடம் கெஞ்சினான்.

"கண்ணன் சார்! வார்த்தையை மீறுவது புருஷ லட்சணமில்லை" என்றாள் மைதிலி.

"அது சரி..... மீசையை எடுக்கக் கண்ணாடி ரேசர் வேண்டுமே...." அப்பாடா, தப்பித்தோம் என்ற நம்பிக்கையில் கேட்டான், கண்ணன்.

"டேய் கண்ணா அந்தக் கவலை உனக்கு வேண்டாம். நம்ம ஏகாம்பரம் கொண்டு வந்திருக்கிறார்...." என்று ஜெயராமன் கூறியதைத் தொடர்ந்து—

"சார் நாலரை ரூ கொடுத்துப் புது ரேசர் வாங்கினேன்..... இந்தாங்க" என்றான் சிப்பாய் ஏகாம்பரம்.

"ஏண்டா ஜெயராமா.... என்னை உங்க செக்ஷனுக்குக் கூப்பிட்டுவிட்டு, நீயும், சுகுணாவும் இதைத்தான் ரகசியமாகப் பேசிண்டேளா? நீ உருப்படுவியா?"

வேறு வழியின்றி கண்ணன் ரேசரை வாங்கிக் கொண்டு, கண்ணாடியில் பார்த்தவாறே தன் வலப்பக்க மீசையை விரலால் தடவிக் கொண்டான்.

அடுத்த கணம் மீசை கையோடு வந்தது. எல்லோரும் ஆச்சரியத்துடன் திறந்த வாயை மூடவில்லை.

"ஒட்டு மீசை!" என்றவாறு சிரித்தபடி கண்ணன் தன் மீசையை ஒட்டிக் கொண்டான்!

# இவருடைய புன்னகைக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது



## இந்த ஃப்ளோரைட் பாதுகாப்பினை பினகா ஃப்ளோரைட் அளித்துள்ளது




உங்கள் பற்கள் பல்லாண்டு நீடித்திருக்க, சொத்தை விழுவதிலிருந்து அவைகளைப் பாதுகாக்க வேண்டும். இதோ பினகா ஃப்ளோரைட். அவைகளுக்கு ஃப்ளோரைட் மூலம் இன்றியமையா பாதுகாப்பளிக்கிறது. ஏனெனில், தீங்கு விளைவிக்கும் அமிலங்கள் பற்களின் பரப்பைத் தாக்கும் போது, பற்களினால் கிரகிக்கப்பட்ட ஃப்ளோரைட், பல்லின் எனாமலுக்கு சொத்தையை எதிர்க்கும் ஆற்றலைக் கொடுக்கிறது. இதன் மூலம் பற்சிதைவு ஆரம்ப கட்டத்திலேயே தடுத்து நிறுத்தப்படுகிறது. பற்சிதைவையும் சொத்தையையும் பினகா ஃப்ளோரைட் உபயோகித்து தடுத்து நிறுத்துங்கள்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ

**பினகா ஃப்ளோரைட்**
டூத்பேஸ்ட்

இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை

ULKA-HCG-BF-11-85-TAM

## 6. சூடிக்கொடுக்கும் சிவம்!

அந்தக் கன்னி அம்மன் கோயில் பூசாரி அவர்தாம். அது பரம்பரையாக உள்ள உரிமை. சந்திரசூடன் சைக்கிளில் இருந்தபடியே காலைத் தரையில் ஊன்றி நின்றார். சிறுவர்கள், சக்தி சிவத்தைக் கேலி செய்து விளையாடிக் கொண்டிருந்ததைச் சில நிமிடங்கள் கவனித்துவிட்டு மீண்டும் சைக்கிளைச் செலுத்தினார்.

ஒருநாள் சந்திரசூடன், "சாமி, அம்மன் கற்சிலையாச்சே, இதை எப்படிக் கலியாணம் செய்ய முடியும்?" என்று கேட்டார்.

"கற்சிலையா? போடா போடு தினமும் இந்தக் கன்னிப் பொண்ணு என்னோடு பேசுகிறாள். என்னைப் பார்த்துச் சிரிக்கிறாள். இரவு வேளையில் கொலுசு ஒலிக்க இவள் நடக்கும் அழகே அழகு. கோயில் முழுவதும் நடப்பாள். பின்னாலேயே போவேன். அருகில் நெருங்கினால் சிரிப்பாள். உடனே மறைந்து விடுவாள். கோயில் முழுவதும் தேடுவேன். எங்கிருந்தோ அவளுடைய தேனொழுகும் சிரிப்பொலி கேட்கும். இப்படி எத்தனை நாளைக்குத்தான் இந்தக் கண்ணாம்பூச்சி விளையாட்டோ?" என்றார் பூசாரி. கண்களில் நீர் பெருகியது.

"எப்போதுதான் உமக்குச் சம்மதிப்பாள்?" என்று சந்திரசூடன் கேட்டதும் அவர் கோபத்துடன் அம்மனைத் திரும்பிப் பார்த்தார். அம்மனை ஒரு வாலைக் குமரி போல் அலங்கரித்திருந்தார்.

"விடுவேனா இந்த நீலியை, எங்கே போய் விடுவாள்?" என்றார். பிறகு, அம்மனைப் பார்த்து, "அடியே, நீ சம்மதித்துத்தானாக வேண்டும். எல்லாம் தயார். கொட்டு மேளம், மாலைகள், விருந்து, சப்ரமஞ்சக் கட்டில், மெத்தை, பன்னீர், சந்தனம், பால், பழம்..... ஓஹோ..... ஹோ..... எப்போ கலியாணம்? எப்போம? கண்ணம்மா, எப்போ வருவே.....?" என்று கூவியபடியே சிலையை நோக்கிப் பாய்ந்தார். காலடியில் மயங்கிச் சரிந்தார்.



அந்தச் சம்பவம் சந்திரசூடனை மெய் சிலிர்க்க வைத்தது. ஓ! ஆத்மா பரமாத்மாவைத் தேடித் தவிக்கும் நிலை. நான் கடவுள்..... நான் கடவுள்.... உள்ளேயும் கடவுள், வெளியேயும் கடவுள். அம்பாள் கடவுள், பூசாரி கடவுள், இந்த நானுகிய சந்திரசூடனும் கடவுள். பூரணம் — அதுவும் பூரணம், இதுவும் பூரணம்.

இரண்டு பூரணங்கள் எப்படிச் சேர்ந்தால் என்ன? சிரிக்கிறீர்களா?

கற்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ,

# உணர்வுகள் உறங்குவதில்லை

ரா.சு.நல்லபெருமாள்



இருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ என்று ஒருத்தி ஏங்கியபோது நீங்கள் மெய் சிலிர்க்கவில்லையா?

''..... எப்போ கலியாணம்? எப்போமா? கண்ணம்மா எப்போ வருவே......?'' என்றபோது சந்திரசூடன் மெய் சிலிர்த்தார்.

கன்னியம்மன் கோயிலுக்கு அருகே வந்ததும் அன்றும் சைக்கிளை நிறுத்தினார் சந்திரசூடன். அந்தக் கோயிலின் தர்ம கர்த்தாப் பொறுப்பைச் சந்திரசூடன் ஏற்றிருந்தார். அந்தக் கோயிலைத் தாண்டிப் போகும் போதெல்லாம் கோயிலுக்குள் சென்று கண் காணிப்பார். கோயிலைச் சுத்தமாக வைத்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாயிருந்தார். சைக்கிளை வாசலில் நிறுத்திவிட்டுக் கோயிலுக்குள் சென்றார்.

உள்ளே ஆள் அரவம் இல்லை. அது ஒரு சிறு கோயில். கூட்டம் அதிகம் வராது. இன்னும் அந்தக் கோயிலுக்கு சினிமா நடிகர்கள் யாரும் வரவில்லையாதலால் அம்பாள் புகழடையாமலிருந்தாள். கர்ப்பக் கிருஹத்தில் இரண்டு அகல் விளக்குகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன. இன்னும் அபிஷேகமும் பூஜையும் ஆகவில்லை. பூஜை செய்யும் சக்திசிவத்தைத் தேடினார். அபிஷேகம் ஆகவில்லை போலிருக்கிறதே' என்று நினைவூட்டினார்.

சக்திசிவம் தலையை ஆட்டியபடியே எழுந்தார். கர்ப்பக்கிருஹத்துக்குள் சென்றார். அம்மன் சிலை மீதிருந்த பழைய மாலைகளைக் களைந்தார். துணிகளை அவிழ்த்தார். அபிஷேகம் செய்யத் தொடங்கினார்.

சந்திரசூடன் மிகுந்த ஆர்வத்துடன் கவனித்துக் கொண்டிருந்தார். பூசாரிக்கு வெளியுணர்வே இல்லை. ஓர் ஆனந்த நிலை. அபிஷேகம் முடிந்தபிறகு, அம்மனைத் துணியால் ஈரம் போகத் துடைத்தார். பிறகு, உச்சியிலிருந்து அலங்காரம் செய்யத் தொடங்கி விட்டார்.

சக்திசிவத்தின் அலங்காரம் பிரசித்தமானது. நவராத்திரியின் போது, ஒவ்வொரு தினமும் அவர் அம்மனுக்குச் செய்யும் அலங்காரத்தைக் காணக் கூட்டம் கூடும். அவ்வளவு அலங்காரமும் வேடிக்கை பார்க்க வரும் கூட்டத்திற்காகவா? அவர் தம்முடைய திருப்திக்காகச் செய்யும் அலங்காரங்கள் அவை. அலங்காரத்தை முடித்துவிட்டு கர்ப்பக்கிருஹத்தின் ஒரு மூலையில் அமர்ந்துவிடுவார். அம்மனுடைய அழகில் அவருடைய

உயிர் கலந்து உறவாடும். கால, இடம் எதைப் பற்றியுமே பிரக்ஞை இருக்காது.

இப்போது அம்மனுக்கு அலங்காரம் செய்ய முனைந்தவரை சந்திரசூடன் மிகுந்த பக்தியோடும், ஆர்வத்தோடும் கவனித்துக் கொண்டிருந்தார். சக்திசிவம், வெளியுலகப் பிரக்ஞை இன்றி அலங்காரம் செய்வதில் ஈடுபட்டிருந்தார்.

ஒவ்வொரு பகுதியிலும் அலங்காரம் செய்தபோது, அலங்கார ஸ்லோகங்களைக் கூறி, தமக்குள்ளாகவே லயித்து அனுபவித்துக் கொண்டிருந்தார்.

சந்தனக் காப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு பெரிய கும்பாவிலிருந்த குளிர்ந்த சந்தனத்தை அள்ளி, சிலையின் உச்சியிலிருந்து அலங்காரத்தைத் தொடங்கினார்.

அம்மன் பதினெட்டு வயதுப் பெண்ணாகக் காட்சியளித்தாள். சக்திசிவம் பரவசமடைந்தவராய்க் கைகளிரண்டையும் மேலுயர்த்தி "மஹா லாவண்ய—சேவதி!" என்று உரக்கக் கூறினார்—பேரழகின் பொக்கிஷம்.

தலையை இருபுறமும் சாய்த்து அம்மனுடைய முழு உருவத்தையும் கண்டு களித்தார். புளங்காகிதமடைந்தார். பார்த்துக் கொண்டேயிருந்தார். இனி எப்போது சுய நினைவுக்கு வருவாரோ?

சந்திரசூடன், மெய்சிலிர்த்து நின்றார். கர்ப்பக்கிருஹத்தில் நின்று கொண்டிருந்த சக்திசிவத்தைச் சுற்றி ஏதோ ஓர் ஒளி கவசம் போல் பரவியிருந்தது. சக்தியும் சிவனும் கலந்துவிட்ட பாவனையோ? அந்த ஒளி அதனால்தானோ.....

அந்தப் பூசாரி உண்மையிலேயே ஓர் அநுபூதி சித்தர்தாம் என்று நம்பினார், சந்திரசூடன். ஆனால் ஊரில் நம்பத் தயாரில்லை. காம வெறி பிடித்த பைத்தியம் என்று எண்ணினார்கள். சிலர் இதை ஒரு பிரச்னையாகவே கிளப்பினார்கள். சினிமாக் கொட்டகை அதிபர் ராமசுப்பன் இதில் தீவிரமாயிருந்தார்.

**என் நண்பர் ஸ்கூட்டரை நிமர் என்று நிறுத்தி ஹெல்மெட்டைக் கழற்றி வீதியில் தட்டிக் கொண்டிருந்தார். ஹெல்மெட்டில் ஏராளமான எறும்புகள்! தலையில்மாட்டிக்கொண்டதால்தலையில் மயமயவென்று எறும்புகள் நடமாட்டம்! இதற்குக் காரணம் தலையில் தடவிக் கொண்டிருந்த தேங்காய் எண்ணெய் ஹெல்மெட்டில் உள்ளே இருக்கும் ஸ்பாஞ்சில் ஊறி இருக்கிறது! வீட்டில் அதைக்கழற்றிவைத்தபோது எறும்புகள் தேங்காய் எண்ணெய் வாசனைக்கு அதில் அடைக்கலம் ஆகிவிட்டன!**

**தகவல்: மேஜர்தாசன்.**



இரண்டு மாதங்களுக்கு முன்பு இது விஷயமாக முடிவெடுக்கச் சிலரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு கோயிலுக்கு வந்தார், ராமசுப்பன். அவருக்கு அந்தக் கோயிலின் மீது ஏற்கனவே கோபம். அதற்குத் தர்மகர்த்தாவாக வேண்டும் என்ற ஆசை அவருக்கு இருந்தது. ஆனால் அந்தக் கோயிலின் நிர்வாகக் குழு சந்திரசூடனைத் தேர்ந்தெடுத்து விட்டது. அந்தக் கோயிலின் முன் மண்டபத்தில் பக்தர்கள் அமர்வதற்குத் திண்ணை கட்டிக் கொடுத்திருந்தார். அதனால், தர்மகர்த்தாவாக வரத் தமக்குத்தான் அருகதை உண்டு என்று எண்ணினார். தம்முடைய பண பலம் இந்த விஷயத்தில் செல்லுபடியாகவில்லையே என்ற ஏமாற்றம் கோபத்தைக் கிளறியது. இந்தக் கோயிலை அரசு பொறுப்பில் ஏற்க வைக்காமல் விடப் போவதில்லை என்று சவால் விடுத்தார். அவருடைய பணத்தை நம்பியிருந்த ஓர் அறக்கட்டளைத் துறை அதிகாரி, அவருக்குத் துணை வந்தார். இப்போது அந்தக் கோயிலை அரசு ஏற்கும் விஷயமாக வழக்கு ஒன்று நீதி மன்றத்தில் உள்ளது.

ராமசுப்பன் தம்முடைய ஆட்களுடன் கோயிலுக்கு வந்தபோது, சந்திரசூடன் கோயிலின் பிராகாரத்தை உழவாரப் படை கொண்டு சுத்தம் செய்து கொண்டிருந்தார்; ராமசுப்பனைக் கண்டதும் உழவாரப் படையைத் தூணில் சாய்த்து வைத்துவிட்டு முன் மண்டபத்திற்கு வந்தார்.

"வாங்க. என்ன வேணும்?" என்று கேட்டார்.

"தீர்மானமாக உங்களிடம் பேச வந்திருக்கிறேன்" என்றார் ராமசுப்பன்.

"உங்களுக்குத்தான் என்டோன்மென்ட் அதிகாரி துணை இருக்கிறாரே. நாம் பேச என்ன இருக்கிறது? நீதி மன்றம் தீர்ப்பளிக்கட்டும்" என்றார் சந்திரசூடன்.

"நான் அது பற்றிப் பேச வரவில்லை. இங்கேயுள்ள பூசாரி பற்றிப் பேச வந்திருக்கிறேன்."

"ஓ..... இப்போது இந்தப் பிரச்னையா?"

"அம்மன் கோயிலில் ஒரு பைத்தியம் பூசாரியாக இருப்பது— இதைப் பக்தர்கள் சகித்துக் கொண்டிருக்க முடியாது."

"என்ன சார் பெரிய சகிப்பு? இந்து ஆலயங்களில் நாஸ்திகர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்கிறார்கள். இந்த அநாசாரத்தைச் சகித்துக் கொண்டுதானே இருக்கிறீர்கள்? அதைவிட இந்தப் பூசாரியின் விஷயம் கேவலமானதல்ல."

"இந்தப் பூசாரி கோவிலில் இருப்பதே அநாசாரம்."

"என்ன அநாசாரம்? இவர் என்ன தவறு செய்தார்?"

"பெண்கள் இங்கே வரப் பயப்படுகிறார்கள்."

"எந்தப் பெண்ணிடமாவது இவர் தவறாக நடந்திருக்கிறாரா?"

"நடக்கவில்லையென்றாலும் பயத்தைக் கொடுக்கிறதே. இவர் காம வெறி பிடித்த பைத்தியம்."

''பைத்தியம் பிடித்து என்ன செய்தார்? உங்களை அடிக்க வந்தாரா?''

''கோவிலில் இருக்கும் அம்மனைக் காதலியாகப் பாவித்து ஆடுகிறார், பாடுகிறார். தம்முடைய மனைவி அந்த அம்மன் என்கிறார். காமப் பைத்தியம்.'' என்றார் ராமகப்பன்.

சந்திரசூடன் சிரித்தார். ''நீங்கள் மார்கழியில் தினம் திருப்பாவை கேட்கப் போகிறீர்களே; உங்களுடைய கருத்துப்படி பார்த்தால், ஆண்டாளும் பைத்தியந்தான்'' என்றார்.

ராமகப்பன் திகைத்தார். ''ஆண்டாளும், இந்தப் பைத்தியமும் ஒன்றாகுமா? உங்கள் பேச்சே புரியவில்லையே'' என்றார்.

''உங்களுக்குப் புரியாது. கோவிலை உங்கள் சுயநலத்திற்காக அரசிடம் ஒப்படைக்கப் பாடுபடும் உங்களுக்கு இந்த உயர்ந்த விஷயம் எல்லாம் புரியாது, சார்'' என்றார் சந்திரசூடன்.

''எது உயர்ந்த விஷயம்? ஒரு பைத்தியத்தை ஆதரிப்பதா?''

''காதல் தோன்றிவிட்டால் எல்லாருமே பைத்தியங்கள்தாம். பெரியாழ்வார் தம் மகளைப்பற்றி அப்படித்தானே முதலில் நினைத்திருப்பார். பாசுரங்கள் அத்தனையும் காதல் சுவை நிறைந்த புலம்பல்கள்தாமே. உங்களைப் போல் ஒரு புண்ணியவான், அவளுடைய காலத்தில் இருந்திருந்தால், ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்தே அவளை விரட்டியடிக்க முனைந்திருப்பார். கடவுளை அவள் காதலனாகப் பாவித்தாள். இவர் காதலியாகப் பாவிக்கிறார். பாவனை எப்படி இருந்தாலும் இரண்டுமே பரமாத்மாவை எண்ணி ஏங்கும் நிலைதான். இதில் உங்களுக்கு என்ன சங்கடம்?''

இதற்கு ராமகப்பன் பதில் கூற இயலாமல் விழித்தார். ''இந்த மாதிரிப் பைத்தியங்களைக் கோவிலுக்குள் அனுமதிப்பது நல்லதில்லை. அவ்வளவுதான் நான் சொல்வேன்'' என்றார் எரிச்சலுடன்.

''பயப்படாதீர்கள். இவரால் இந்தக் கோவில் கெட்டுவிடாது'' என்றார், சந்திரசூடன்.

''கோவிலுக்கு வரும் பக்தர்களுக்குப் பிடிக்கவில்லை.''

''பிடிக்காதவர்கள், இந்தப் பூசாரியைப் புரிந்து கொள்ளாதவர்கள் இந்தக் கோவிலுக்கு வர வேண்டாம்.''

''சொந்தக் கோவில் என்னும் தைரியத்தில் பேசுகிறீர்கள். என்டோமென்டில் எடுத்தால் எல்லாம் சரியாகிவிடும்.''

''அதற்குத்தான் உங்கள் பணம் விஷமம் செய்து வருகிறதே'' என்று கூறிச் சிரித்தார், சந்தரசூடன்.

ராமகப்பன் வேறு வழியின்றி, தம்முடன் அழைத்து வந்திருந்த மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு கோவிலை விட்டுக் கோபத்துடன் எழுந்து சென்றார்.

அவ்வளவு அமர்க்களத்திலும் சக்திசிவம் தம்மை மறந்த நிலையில் கோவிலினுள் ஒரு தூண் மீது சாய்ந்தவண்ணம் ஆனந்த நிலையில், அம்மனுடன் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார் —

கோவில் பிரகாரத்தில் நடந்து கொண்டிருந்த சந்திரசூடன் பழைய நினைவுகளிலிருந்து விடுபட்டு கைக்கடிகாரத்தைப் பார்த்தார். பதினொன்று! ஓ! ஒன்பது மணிக்குக் கோவிலுக்குள் வந்தவர். அம்மனுக்கு நடைபெற்ற அலங்காரத்தையும், பூசாரியின் லயிப்பையும், கண்டு காலம் போனது தெரியாமல் இருந்ததை எண்ணி வியந்தார்.

இந்தப்பூசாரியைப்பூரணமாக ஆராய்ந்து, இவருடைய அநுபூதி அனுபவங்களைப்புரிந்து கொண்டு ஒரு புத்தகம் எழுதினாலாவது பயன் உண்டு. பெருமையும் உண்டு. ஒரு சினிமாக்காரியின் வாழ்க்கையை எழுதி எதைச் சாதிக்கப் போகிறேன்? ஆனால் இவரைப் பற்றி எழுதினால் யார் படிப்பார்கள்? காளி மீது காதல் கொண்டு திரியும் இந்தப் பைத்தியத்தைப் பற்றி யாருக்கு அக்கறை?

இந்திராணியின் வாழ்க்கை வரலாறு லட்சக் கணக்கில் விற்றுப் போகும். ஒவ்வொரு பத்திரிகையும் புத்தகத்தைப் பாராட்டி எழுதும். செட்டியார் புத்தகத்தை அச்சிட்டு ஒரு பெரிய வெளியீட்டு விழாவையே நடத்திவிடுவார். சம்பத் சொன்ன மாதிரி எனக்கும் மிகுந்த பணம் கிடைக்கும் —

இவ்வாறு எண்ணியபடியே கோவிலின் முன்புறத்திற்கு வந்தார். அப்போது யாரோ ஒரு பக்தர் பூசாரியிடமிருந்து குங்குமப் பிரசாதம் வாங்கிக் கொண்டிருந்தார். இவரும் கைகளை நீட்டிக் குங்குமத்தைப் பெற்று நெற்றியில் இட்டுக் கொண்டு, பத்திரிகை அலுவலகத்தை நோக்கி சைக்கிளில் விரைந்தார்.

(தொடரும்)



''பத்திரிகை ஆசிரியரோட சட்டையைத் தைக்க வாங்கினது பெரிய தொல்லையாப் போச்சு!''

''ஏன்?''

''சட்டையின் காலர்லே 'லோடியாக் டைலர்'னு பேர் வைச்சு தைச்சதுக்குத் தனியா விளம்பரக் கட்டணம் வேணும்கிறார்!''

— எம். அசோக்ராஜா.

# மருத்துவமனை அனுபவம்



### அநியாயமாய் ஓர் உயிர் பிரிந்தது

இதய நோய் சிகிச்சைக்காகக் கோவை அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார் என் தந்தை. ஓர் இரவு திடீரென்று மூச்சுத்திணறல் ஏற்பட்டது அவருக்கு. பதறிப் போய் நர்ஸை உதவிக்கு அழைத்தேன். அவரோ சற்றும் அலட்டிக் கொள்ளாமல் பிற நர்சுகளிடம் 'ஆக்ஸிஜன் சிலிண்டரைக் கொண்டு வரச் சொன்னார். பழுதாகிப் போன பிராண வாயு சிலிண்டரை வைத்துக் கொண்டு சிறிது நேரம் போராடினார்கள் நர்சுகள். அதற்குள் என் தந்தையின் உயிர் பிரிந்துவிட்டது. இந்த நிகழ்ச்சி என் மனத்தில் ஆழமான வடுவாகப் பதிந்து போய்விட்டது.

— ஜெயவசந்தன், கோவை—45.

### சமயோசிதம் காத்தது

இருபது வருடங்களுக்கு முன்னால் திடீர் வயிற்று வலியால் துடித்துப் போய் அவசரச் சிகிச்சைப் பிரிவில் சேர்க்கப்பட்டேன். மருத்துவர்கள் கைவிட்ட நிலையில் உறவினர்கள் எல்லோரும் சூழ்ந்து கொண்டு 'ஓ' வென்று அலறினார்கள். தலைமை மருத்துவர் டாக்டர் சுசீலா ராஜகோபாலனின் மூளையில் திடீர் யோசனை உதிக்கவும் ஆபரேஷன் தியேட்டருக்கு அவசரமாய் என்னை எடுத்துச் சென்று 15 நிமிடத்தில் போகும் உயிரைப் பிடித்து நிறுத்திவிட்டார்கள் அந்தத் தலைமை மருத்துவரும் அவரது சக டாக்டர்களும்.

— அமலன், புதுவை—1.

### மருந்து காணாமல் போன மர்மம்

அடிக்கடி தலைவலி, மயக்கம், தூக்கத்தில் நடத்தல் போன்ற உபாதைகளுக்குச் சிகிச்சைப் பெற வேலூர் சி. எம். சி. ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டேன். எனக்கு டாக்டர் எழுதிக் கொடுத்த மருந்து ஏகமாய் விலை. இந்த மருந்து அடிக்கடி தொலைந்து போக ஆரம்பித்தது. இந்த மர்மத்தை விடுவித்தவர் டாக்டர்தான். எனக்கு அடுத்த படுக்கையில் இருந்த ஏழை நோயாளிக்கும் அதே மருந்தை எழுதிக் கொடுத்திருந்தார் டாக்டர். மருந்து வாங்க வசதியில்லாததால் அவர் என் மருந்தில் கை வைத்திருக்கிறார்!

— பி. கஸ்தூரி, வேலூர்.

விடுப்புக்குப் பிறகு அன்று பணியில் சேர்ந்திருந்த நர்சு ஜெ. லக்ஷ்மிக்கு மயக்க ஊசி போடுவதற்குப் பதில் அதே சிகிச்சைக்காக வந்திருந்த பக்கத்து அறை டி. லக்ஷ்மிக்கு அதைப் போட்டிருந்தார் என்று தெரிய வந்தது. பிறகு லக்ஷ்மிகளை மாற்றி அன்றைய ஆபரேஷனை வெற்றிகரமாக முடித்துவிட்டார் டாக்டர்.

— ஆர். மகாலக்ஷ்மி, கோவை—11.

### உயிர் வந்தது

சிஸேரியன் ஆபரேஷனுக்குப் பிறகு குழந்தையை என்னிடம் விடாமல் பொது வார்டில் வைத்திருந்தார்கள். என் அறைக்கு வந்த நர்சு ஒருவர் மற்றவளிடம் ''இவள் குழந்தை இறந்துவிட்டதை இவளிடம் சொல்லாமல் வைத்திருக்கிறார்கள்'' என்று என்னைச் சுட்டிக் காட்டி ஆங்கிலத்தில் கூறினாள். எனக்கு ஆங்கிலம் தெரியாது என்று நினைத்துக் கொண்டாள் போலும்! அசையக் கூட முடியாத அந்த நிலையில் அழுவதைத் தவிர வேறெதுவும் என்னால் செய்ய முடியவில்லை.





### கேட்பாரில்லையா?

இரவு ஏழு மணி இருக்கும். அரசாங்கப் பொது மருத்துவ மனையில் திடீரென்று மின் வெட்டு. நோயாளிகளும் அவர்களைப் பார்க்க வந்தவர்களுமாகக் கூட்டம் நிரம்பி வழிந்தது. குழந்தைகள் ஒரு பக்கம் அலற, நடந்து கொண்டிருந்தவர்கள் சுவரிலும் பிறர் மீதும் இடித்துக் கொண்டு திண்டாட, 'ஜெனரேட்டரை ஆன் செய்யுங்கள்' என்றது ஒரு குரல். 'அதுதான் ஒரு வாரமா ரிப்பேர் ஆச்சே' என்று அலட்சியமாய்ப் பதில் சொன்னது இன்னொரு குரல். ஆஸ்பத்திரியில் ஜெனரேட்டர் வசதி இல்லாமல் இருப்பது எவ்வளவு ஆபத்து என்று இந்தச் சிப்பந்திகள் சிறிதும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

— எஸ். வெங்கடேசன், கும்பகோணம்.

### லக்ஷ்மியும், லக்ஷ்மியும்

என் தாயாருக்கு காடராக்ட் அறுவைச் சிகிச்சை செய்ய டாக்டர் கத்தியை எடுத்துக் கண்ணில் வைத்ததுதான் தாமதம், அம்மா 'வீல்' என்று அலறினாள். சந்தேகத்துடன் டாக்டர் விசாரிக்கவும் பல நாள் என் தாயார் வந்ததும் என் குழந்தையைக் கொண்டு வந்து என்னிடம் காட்டினார். பிறகுதான் எனக்கு உயிர் வந்தது.

— மகாலக்ஷ்மி சங்கர், டோம்பிவிலி மேற்கு.

### மறக்க முடியவில்லை

சென்னை தண்டையார்பேட்டை மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருந்த என் அம்மா இறந்து விட்டதாகச் செய்தி வந்தது. உடனே அங்கு சென்றதும் சவக்கிடங்கில் அம்மாவின் சடலத்தைத் துணி கூடப் போடாமல் வைத்திருந்த காட்சி என் துக்கத்தைக் கூட மறந்து அதிர்ச்சியடையச் செய்தது. அம்மா இறந்துவிட்டாள் என்ற பயங்கர உண்மை தாக்கியதும் சடலத்தை நெருங்க முடியாமல் உள்ளுக்குள் குமுறிக் குமுறிச் செத்தது மறக்க முடியாத அனுபவம்.

— திருமதி வி. ஜி. மூர்த்தி, செகந்தராபாத்

### ஆஸ்பத்திரியா, வியாபாரக் கிடங்கா?

அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது விபத்தில் சிக்கிய என்





தந்தை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறார் என்று அறிந்து அங்கு விரைந்தேன் என் அம்மாவுடன். அவர் காலிலிருந்து ரத்தம் வழிந்த வண்ணம் இருந்தது. எக்ஸ்ரே எடுக்க முதல் மாடிக்குப் போக வேண்டும் என்றார்கள். அவரைத் தூக்கி வந்த இரு சிப்பந்திகள் 'lift' அருகே அவரைக் கிடத்திவிட்டு ஆளுக்குப் பதினைந்து ரூபாய் கொடுத்தால்தான் மேலே கூட்டிச் செல்ல முடியும் என்று சொல்லி 'ஸ்ட்ரெட்சரை' வைத்துவிட்டுப்போய்விட்டார்கள். அவசரத்தில் அதிகம் பணம் எடுத்துச் செல்லாத நான் ரத்தப்போக்கைப் பார்த்துப் பீதியுடன் தவித்து நின்றபோது அங்கு எதேச்சையாக வந்த உறவினர்கள் அப்பாவை முதல் மாடிக்குத் தூக்கிச் செல்ல உதவினார்கள்.

பிற்பாடு சிப்பந்திகளைக் குறித்துப் புகார் செய்தபோது இதெல்லாம் ரொம்ப சகஜம் என்ற பதில்தான் கிடைத்தது.

— பானுமதி ராமன், சென்னை—38.

## பிரமிக்க வைத்த நிகழ்ச்சி

பிரசவ சிக்கலில் குழந்தை இறந்துவிட இனிதான் குழந்தையே பெற முடியாது என்று அறிந்த அந்தப் பெண் சோகத்தின் எல்லையில் இருந்தாள். இரண்டாவது, மூன்றாவது பிரசவத்திற்கென வந்திருந்த சில பெண்கள் (நான் உட்பட) அவளுக்கு வாய் வார்த்தையாக ஆறுதல் சொன்னோம். அப்போது முதல் குழந்தை பெற்றிருந்த மற்றொரு பெண் தன் கணவன், மாமியார் இவர்களுடன் கலந்தாலோசித்துத் தன் குழந்தையை அந்தத் தாய்க்குத் தர முன் வந்ததும், டாக்டரின் உதவியுடன் சட்டபூர்வமாக தத்துக் கொடுத்ததும் என்னைப் பிரமிக்கச் செய்தது.

— எஸ். கௌசல்யா, கோவை—4.

## தவறு தவிர்க்கப்பட்டது

ஆபரேஷன் அறையில் எனக்கு ஆபரேஷன் செய்ய எல்லாம் தயார் நிலையில் இருந்தது. எனக்குத் தைரியம் சொல்ல அங்கு வந்த என் கணவர் பதிவுச் சீட்டைப் பார்த்துவிட்டு திடுக்கிட்டார். ராஜராஜேஸ்வரியான எனக்கு ராஜேஸ்வரிக்கு ஆக வேண்டிய ஆபரேஷன் செய்யப்படுவது தவிர்க்கப்பட்டது.

— ராஜ ராஜேஸ்வரி ஈஸ்வரன், வடுவூர்.

## அறியாமையால் வந்த வினை

என் தாயாருக்கு ஆபரேஷன் ஆகியிருந்த சமயம். அடுத்த படுக்கையில் இருந்த பெண்மணிக்கு மருத்துவர்களின் எச்சரிக்கையை மீறி அவள் படிப்பறிவற்ற உறவினர்கள் சூடான ஆகாரம் கொடுக்கவே, இரண்டு நாட்களில் குணமாகி வீடு திரும்ப வேண்டிய அவள் ½ மணி நேரத்திலேயே உயிரை விட்டாள்.

— என். வாசுதேவபிரபு, சென்னை—54.

## சொல்லச் சொல்லக் கேட்காமல்

ஆஸ்துமாவால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த என் சகோதரியை அரசு மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றோம். அவளுக்குப் பென்சிலின் ஒவ்வாமை உண்டு என்று சொல்லச் சொல்லக் கேட்காமல் அவளுக்குப் பென்சிலின் ஊசி போட்டு ஐந்து நிமிடங்களில் அவள் உயிரைப் பறித்துவிட்டார்கள்!

— வி. சுகந்தா, புது டெல்லி—58.

## மனம் நெகிழ்ந்தேன்

இடது கால் முறிவுக்காக தீவிரச் சிகிச்சைப் பிரிவில் இருந்தேன். ஒரு தாயின் பரிவுடன் என்னைக் கவனித்துக் கொண்டார் அந்த நர்சு. நான் நன்கு குணமடைந்து வந்தபோது ஒரு நாள் அவர் முகம் மிகவும் வாடியிருப்பதைக் கண்டு காரணம் கேட்டேன். சிரித்து மழுப்பிவிட்டார் அவர். பிறரிடம் விசாரித்தபோது தெரிந்தது. அடுத்த வார்டில் சிகிச்சை பெற்று வந்த அவருடைய தந்தை அன்று காலை காலமாகிவிட்டார் என்று. அந்த நர்சின் அன்பையும், தன்னலமின்மையையும் நினைத்தால் இப்போதும் என் கண்கள் பனிக்கின்றன.

— த. வெ. கௌரி, திருநெல்வேலி—7.

**ப்ளோப்ளாஸ்ட் நிறுவனம் வழங்கும் வி. ஐ. பி. சூட்கேசைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**B. கஸ்தூரி,**
**292, மெயின் பஜார்,**
**சைதாப்பேட்டை,**
**வேலூர்—632012.**



# உங்கள் ஸ்ரீராம்
# உயர்வின் பின்னணி...
# உலகறிந்த ரகசியம்!

நாணயமும், திறமையும், முதிர்ந்த அனுபவமும் ஒருங்கிணைந்த நிர்வாகச் சிறப்பு, பொருளாதார பலம், பொது மக்களின் ஆழமான நம்பிக்கை— இவையே ஸ்ரீராம் குருப் நிறுவனங்கள் அருகு போல் வேரோடி ஆல் போல் செழித்து வளரக் காரணமான நீங்கள் அறிந்த ரகசியம்.

- ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட் தமிழ்நாட்டிலேயே தலைசிறந்த சீட்டு நிறுவனமாக வளர்ந்து ஆண்டுதோறும் ரூ. 15 கோடிக்கு மேல் குறித்த நேரத்தில் பட்டுவாடா செய்கிறது.
- தென்னிந்தியாவில் சிறந்த நிறுவனங்களில் முன்னணி வரிசையில் உள்ள ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி தவணை முறையில் வாகனங்களை வாங்க ரூ. 7 கோடிக்கு மேல் நிதியுதவி அளித்துள்ளது.
- ஸ்ரீராம் குருப் அங்கத்தினர்களின் எண்ணிக்கை 50,000 க்கு மேல் வளர்ந்துள்ளது.
- 1985-86ல் குத்தகை வர்த்தகத்தில் (leasing business) புதிய வேகம் பெற்றிட ஸ்ரீராம் திட்டமிட்டுள்ளது.
- ஸ்ரீராம் அலுவலகங்கள் தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் உள்ளன. செப்டம்பரில் கேரளாவிலும் மகாராஷ்டிராவிலும் துவங்குகிறது.
- ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட் பெரும் அளவில் முதலீட்டுப் பங்குகளை விரைவில் வெளியிடும்.

ஸ்ரீராம் குருப் கம்பெனிகளின் நிர்வாகிகள் வங்கி, தொழில் துறை, நிர்வாக ஆலோசனை, போக்குவரத்து, புத்தக வெளியீடு, கட்டிட நிர்மாணம், நிதியுதவி போன்ற பல்வேறு நிதி அபிவிருத்தித் துறைகளில் முதிர்ந்த அனுபவம் கொண்ட நிபுணர்கள்.

உங்கள் நம்பிக்கையும், நல்லெண்ணத்தையும் மூலதனமாகக் கொண்டு, ஸ்ரீராம் குருப் நிறுவனங்கள் ஆண்டுதோறும் வளர்ந்து, ஒளிவீசிப் பணியாற்றுகின்றன.

## ஸ்ரீராம் குருப் கம்பெனிகள்

பதிவு அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு, போன்: 21401/21402. சென்னை 600 001.

தலைமை நிர்வாக அலுவலகம்: ஸ்ரீராம் ஹவுஸ், 10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை 600 086.

பெங்களூர்: 142 & 29/A (இரண்டாம் மாடி) K.H. ரோடு, பெங்களூர்-27

ஹூப்ளி: இரண்டாம் மாடி, விகாஸ் காம்ப்ளெக்ஸ், ஸ்டேஷன்ரோடு ஹூப்ளி.

செகந்திராபாத்: 4, சர்தார்படேல் ரோடு, செகந்திராபாத் 500 003.

நெல்லூர்: 5/944, ஸ்டோன்ஹவுஸ் பேட், நெல்லூர்-2.






6. அற்புதத்துக்கும் உண்டே அன்புத்தாழ்!

> குழந்தைகள் ஆட்டத்தின் கனவை
> யெல்லாம் — அந்தக்
> கோலநன் ஞுட்டிடைக் காண்பீரே!
>
> —பாரதியார்.

அன்புக்காகவே ஸ்வாமி அற்புத லீலை செய்கிறுரென்பது மட்டுமில்லை. அன்புக்காக அற்புத லீலையை அடக்கிக் கொள்ளவும் செய்வார். மிளகு ரஸப் பையன் வீட்டிலேயே இப்படி நடந்திருக்கிறது.

''பூஜையறையில் காலை வைக்க முடியாத படி இப்படி விபூதியை வாரி அடித்திருக்கிருயே!'' என்று ஒரு நாள் அவ்வீட்டினர் குறைபட்டுக் கொண்டனர். கொட்டியிருந்த திருநீற்றையெல்லாம் திரட்டி எடுத்தனர். அதன் பின், பூஜை மேடையைச் சேர்ந்தாற் போலவே, கோடு போட்டாற்போல் ஓர் எல்லை வகுத்துக் கொண்டு, கருராக அதற்குள்ளேயேதான் குழந்தை விபூதியாட்டம் விளையாடிற்று! அலகிலா லீலா விபூதிக்கு அன்பினுல் எல்லை கட்டிக்கொள்வதுதான்!

இருந்தாலும் விஷம புத்தி சில நாட்களிலேயே வேறு விதங்களில் கொட்டமடிக்கத் தூண்டியது. ஓயா விளையாட்டிலும், ஓயாமல் பக்தர்கள் பார்வையிட வருவதிலும் வீட்டினர் ஓய்ச்சலுற்றே போயினர். ஸாயியிடம் சலித்துக் கொள்ளவும் செய்தனர்.

படத்திலிருந்து தமிழ்க்கடிதம்போடுபவர், இதிலும் 'வெரெய்டி' காட்ட எண்ணினுர் போலும்! ஃப்ரிட்ஜிலே, **"If you don't want I will stop"** என்று அழகாக ஆங்கிலத்தில் எழுதிக் காட்டினுர்!

'அடடா! அன்புத் தெய்வத்தின் ஆட்ட பாட்டத்தை வேண்டாம் என்பதா? ஆயினும் இப்படி அமர்க்களம் செய்தாலும் ஈடு கொடுக்க முடியவில்லையே'' என்றெண்ணிய அவ்வடியார்கள், ''கொஞ்சம் குறைத்து விளையாடக் கூடாதா?'' என்று வேண்டினர்.

'காம்ப்ரமைஸ்' செய்து கொண்டார் ஸ்வாமி. **"One leela daily"** என்று

# தீராத விளையாட்டு ஸாயி



எழுதிக் காட்டி, அப்படியே ஒரு நாளைக்கு ஒரே ஒரு விளையாட்டு என்று சமர்த்தாகச் செய்து வருகிறுர்!

* * * * * * * *

தன்னில் தானே நிறைந்த பரப்ரஹ்மம் எதற்காக மாயமான ஸ்ருஷ்டி என்ற ஒன்றைப் புனைய வேண்டும் என்ற கேள்வி நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. ''எதற்காக என்றுல் என்ன? நடைமுறை உலகில் வெறும் விளையாட்டு என ஒன்று நமக்கு இருக்கிறதல்லவா? அப்படித்தான் பரம்பொருளுக்குப் படைப்பு என்பதும். **லோகவத்து லீலா கைவல்யம்**'' என்று வ்யாஸர் ப்ரஹ்ம ஸூத்ரத்தில் கூறுவார். இதற்கு ஆசார்ய சங்கரரின் பாஷ்யம் வெகு அழகு. எதற்காகப் பரம்பொருளுக்கு ஸ்ருஷ்டி லீலை என்று 'எதற்காக' போடுவதே ஸரியில்லை. பயனும் காரணமும் இருந்தாலொழிய எதையும் செய்யக் கூடாது என்ற எண்ணத்தில் தான் 'எதற்காக?' போடுவது. நல்லது, அப்படியானுல் நாம் மூச்சு விட்டுக் கொண்டு உயிர் வாழ்கிறேமே, காரணத்தைக் கொண்டும் பயனை உத்தேசித்துமா அப்படிச் செய்கி

றோம்? மாபெரும் வீர மன்னன் இருக்கிறான்: பேரறிவாளரான அவனது மந்த்ரி இருக்கிறார். இவர்களும் கூடத்தான் பந்து விளையாடுகிறார்கள்; தங்கள் குழந்தையுடன் சொப்பு வைத்து ஆடுகிறார்கள். ஒரு காரணமும் பயனும் கருதாமல் இப்படிச் செய்கிறார்கள். அவ்வளவு பெரியவர்கள் ஏன் விளையாட வேண்டும் என்று கேட்கலாமா? இப்படி வாதத்தைக் கொண்டு போகும் பகவத்பாதர், ''எப்பயனையும் இச்சிக்காமல் வெறும் லீலை புரிவதில்சசனுக்குள்ள ஈடுபாடு அவனுடைய ஸ்வபாவம் (இயற்கை). தர்க்கம், வேதம் என்பவற்றைச் சொல்லிக் கூட அதற்கு ப்ரயோஜனம் காட்ட வேண்டுமென்று கேட்க இடமேயில்லை'' என்று ஒரே போடாகப் போட்டுவிடுகிறார். விளையாடுவது அவனுக்கு மூச்சு விடுவது போலவாம்!

''சக்தி என்பது ஸதாநந்தமாக இருக்கிறது'' (Energy is eternal delight) என்று ப்ளேக் அருமையாய்க் கண்டு சொன்னான். ஆனந்தத்தில் நாம் விளையாடுகிறோம். நித்யாநந்தம் கொண்ட மஹாசக்தி விளையாடுகையில் அது நாம் 'அற்புதங்கள்' என்று சொல்லும் பலவாகக் கூட மலர்கிறது.

# ரா. கணபதி



பேரின்பப் பராசக்தியில் ஒன்றுபட்ட பலர் அப்படி விளையாடி இருக்கிறார்கள். அதற்கு ''எதற்காக?'' போடாமல், அதைப் பற்றி ஏதோ குறை உணர்ச்சி கொள்ளாமல், இன்ன இன்ன காரணத்துக்காகத்தான் இத்தெய்வ புருஷர்கள் அற்புதம் செய்தார்களென்று மன்னிப்புக் கோரும் பாவனையில் அவற்றைச் சொல்லாமல், 'அது அவர்கள் இயல்பு; செய்தார்கள்' என்று ஏற்றுக் கொண்டே ஒவ்வொரு நாட்டிலும் ஆன்றோர்கள் புராண — காப்பியங்கள், தோத்திரங்கள் எழுதியுள்ளனர். பரம வேதாந்தியான தாயுமான ஸ்வாமிகள் ஒருவர் போதாதோ? விசேஷப் பயன் ஏதுமே காட்ட முடியாத சித்து ஆடல்களாகவே பல செய்த ஸித்தர் கணத்தையும் அந்த விளையாடல்களையும் துதித்து எத்தனை பாடல்களைக் கொட்டியிருக்கிறார்?

பயன், பயன் என்றால் மகிழ்ச்சியின் பயன். ஸ்வாமியின் விளையாடலில் எத்தனை பேருக்கு எத்தனை தூய களிப்பு?

பயன் என்று வேறு எதையோ எடுத்தாலும் விளையாட்டு மூலமே விபரீதப் போக்குகளை மாற்றுவது, விபத்துக்களிலிருந்து காப்பது, அறிவூட்டுவது, இவை யாவற்றுக்கும் மேல் அன்பை ஊட்டுவது என்று எவ்வளவோ செய்து வருகிறார். இதுவரை 'வெறும்' விளையாட்டை அதிகம் பார்த்தோமாயினும், இனி ஏனையவற்றுக்கும் உதாஹரணங்கள் பார்ப்போம். விளையாட்டுவழியே இந்ததேசத்தையே காத்தருளியதைக் கூடப் பார்ப்போம். ஆயினும் 'வெறும்' விளையாட்டு என்பதைக் குறை உணர்ச்சியுடன் பார்க்க வேண்டிய அவச்யமே இல்லையாதலால் இதையும் நிறையப் பார்க்கத்தான் போகிறோம். முற்றிலும் வெறும் விளையாட்டாக ஐந்தாறு டெஸ்ட் மாட்சுகள் நடக்கும் போது ஒரு மாத காலம் முழுதும் அதில் செலவிடுவதற்கு உலகம் தயங்காத போது, ஏதோ ஒரு ஸூக்ஷ்மமான முறையில் எத்தனையோ ஸாயி பக்தர்களின் இதயத்துக்குள்ளேயே பாவனமான ப்ரேமாநந்தத்தின் தூவானத்தைத் தெளித்துத் தெளிவிக்கும் ஸாயியின் வெறும் விளையாட்டைக் கூற லஜ்ஜை கொள்வானேன்?

* * * * * * *

விளையாட்டு தாள முடியாமல் பக்தர் அலுத்துக் கொள்வதும் கூட 'அசல்' துன்பம் அல்ல. 'இன்ப வேதனை' என்பதைச் சேர்ந்ததே அது! 'ஸரி, விளையாட்டை நிறுத்தி விடட்டுமா?' என்று ஸ்வாமி கேட்கும் போது பக்தர் மறுகுவதிலிருந்தே இது தெரிகிறதே!

இன்ப வேதனையிலேயே இன்னமும் புகுந்து விளையாடி விழுந்து விழுந்து சிரிக்க

வும் செய்வன், நமது நித்யானந்தச் செல்வன். படக் கண்ணாடியின் மீது வரும் விபூதிக் குப்பலைக் காணவரும் கும்பலைத் தவிர்க்க எண்ணி அதை அழுந்தத் துடைத்தெடுத்த அன்பர் சிலருண்டு. இவர்கள் கரம் துடைப்பை முடித்தவுடன் குறும்புக் கரம் படைப்பைத் தொடங்கியதுமுண்டு! இவர்களால் துடைக்க முடியாமல், கண்ணாடிக்கு உட்புறமே, நேராகப் படத்தின் மீதே பஸ்மக் கொத்துக்கள் புஷ்பித்திருக்கும்!

அந்தக் கையைக் கட்டிப்போட முடியாது. அதேபோல, மிக மிக அவச்யமென்று நமக்குத் தோன்றும் போது அதை விளையாடச் செய்யவும் முடியாது. எந்தக் கடையில் வாங்கிய எந்தப் படமானாலும் அதில் ஐயன் விபூதி வருவதுண்டு; படம்தானென்றில்லை, எந்தப் பொருள் மீதும் அது தோன்றுவதுண்டு என்பதைக் கூட விசாரித்தறியாத ஒரு நிருபர், புட்டபர்த்தியில் விற்கும் படங்களை ஏதோ ஒரு கெமிகலில் ட்ரீட் செய்திருப்பதாகவும், அதுதான் பிறகு விபூதி போலப் பூப்பதாகவும் ஒரு ப்ரபல ஆங்கிலப் பத்திரிகையில் எழுதினர். 'இப்படியெல்லாம் இவர்கள் ப்ரசாரம் செய்ய ஸ்வாமி ஏன் இடம் தருகிறார்? அந்த நிருபர் வீட்டுப் படம் ஒன்றிலேயே விபூதியை — அல்லது தேனாயிருந்தால் இன்னும் விசேஷமாயிருக்கும் — தோற்றுவித்திருக்கக்கூடாதோ?' என்று பக்தர்கள் பதைக்கிறார்கள். ஆயினும், வேறெந்தப் பயன் அவர் விளையாட்டால் விளைந்தாலும் ஸரி, விளையாவிட்டாலும் ஸரி, தம்மை வாத ப்ரதிவாதங்களிலிருந்து காத்து நிலைநாட்டிக்கொள்ளும் பயனை உத்தேசித்து ஸ்வாமி தப்பித் தவறிக்கூட அற்புத லீலை புரிவதே இல்லை. தனி மனிதர்களின் ஐயம் தீர அற்புதம் செய்வாராயிருக்கும். ஆனால் எதிர்ப்ரசாரமாக ஆள் கூட்டி ஆரம்பிக்கும் போதோ, ஏடுகளில் எழுதும்போதோ அதை விஷயமாக எடுத்துக் கொண்டு அத்புதம் புரியவே மாட்டார். ''குழந்தைகளிடம் என் அன்புக்கு அடையாளமே இந்த 'அத்புதம்' என்கப்படுபவை; டெஸ்ட்டுக்கும் டெமான்ஸ்ட்ரேஷனுக்கும் இல்லை'' என்று அர்த்த புஷ்டியுடன் சொல்வார்.

* * * * * * *

எதிர்ப்பாளருக்குத் தேன் வழங்கா விடில் போகட்டும். எதிர்பாராது பாயஸம் படைத்த ஸொந்த அநுபவத்தைப் பங்கு போட்டுக் கொண்டு பருகுவோம்.

ஒயிட்ஃபீல்டில் ஸ்வாமி நடத்திய ஒரு கல்யாணம்.

விருந்துக்கு அமர்ந்திருக்கிறோம். அமுத விருந்தாக ஸ்வாமியின் நேர் தர்சனம் நெருக்கமாகக் கிட்டும்படி மூன்றாம் வரிசையிலேயே இடம் கிடைத்திருக்கிறது.

ஆனால் அப்போது மகிழ்ச்சியாகவா இருந்தது?

கலம் நிறைய விதவிதமாகப் பரிமாறியிருக்கிறது. ''அல்ப போஜனமே கொள்ளும் நாம் ''எறிந்தால்'' ஸ்வாமி எ றி ந் து விழுவாரோ? வேஸ்ட்டே கூடாது என்பவராயிற்றே! இது போதாதென்று நமக்கோ, காரம், புளி அடியோடு உதவாது. இந்தச் சமையலிலோ வைத்துத் திட்டியிருப்பார்களே! சாப்பிட்டதாக பாவனை பண்ணிவிட்டு எழுந்திருந்து விடலாமென்பதற்கில்லாமல் — ஒரு கடாக்ஷம் விழாதா என்று எத்தனையோ நாள் ஏங்க வைத்த 'மஹானுபாவர்' இன்றைக்கு இப்படி நம்மையே வைத்த கண் வாங்காமல் பார்த்துத் தொலைக்கிறாரே!' — இத்யாதி தவிப்புடன் பாயஸத்தைக் குடித்துவிட்டு, அடுத்தபடி தயிர்ப்பச்சடியைவேண்டுமானால் கொஞ்சம் ருசி பார்க்கலாமென்று தைர்யம் செய்து கொண்டேன்.

பச்சடியில் கை வைத்தவுடன் வந்தது, பச்சை மிளகாய்த் துண்டங்கள்!

ஸ்வாமியின் காரமான அதிகாரப் பார்வைக்கு பயந்து அந்தப் பச்சடியை வாயில் வைத்துக் கொண்டேன்.

பச்சடியா, பாயஸமா?

இலையிலே இருக்கு மட்டும், கையிலே எடுத்து வாயிலே வைக்குமட்டும், பச்சடியாய்த்தான் இருந்தது! வாயில் பட்ட மாத்திரத்தில் பாயஸமாக மாறிற்று!

நன்றாக தைர்யம் கொடுத்தது. ஸாம்பார் முதலானவற்றைக் கூட ஒரு கை பார்க்கத் தொடங்கினேன். யாவுமே தித்தித்தன! ஆனால் பாயஸத் தித்திப்பு இல்லை. 'அசட்டு'த் தித்திப்பு என்பார்களே, அப்படி ஆக்கியிருந்தார், அடியேனுக்குப் பொருத்தமாக!

மற்றவர்களுக்குக் காரஸாரமாகத்தான் இருந்ததாம்!

அந்த மநோ மதுரம் என் ஆயுளில் நான் உண்டிராத 'புல் மீல்ஸ்' உண்டு ஜீர்ணித்துக் கொள்ளவும் செய்துவிட்டது!

பின் ஏன் கண்ணில் காரமென்றால் — அதுதான் விஷமம், விளையாட்டு என்பது!

(தொடரும்)



''...அப்பா! பக்கத்து வீட்டு மாமா ஒரு டெலிஃபோன் பண்ணிக்க வந்துக் கிட்டிருக்கார்...!''

## 22

அவன் மீண்டும் தலை நிமிர்ந்தபோது ஒரு விசித்திர மௌனம் எல்லார் பார்வையிலும் கனமான அமர்ந்திருந்தது. அவனது பதிலில் எதிர்கால உறவு தொக்கி நின்றாற் போல.

மெல்லிய தடுமாற்றத்துடன் அவன் ரஞ்சனியைப் பார்த்தான். பரீட்சை முடிவை எதிர் பார்த்து நிற்கும் கவலையும்சந்தேகமும் அவள் கண்களில் நிழலாடுவதைக் கண்டு அவனுள் ஓர் அவமான உணர்வு படர்ந்தது. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு இலேசாகச் சிரித்தான்.

"டோன்ட் பீ ஸில்லி 'யார்'!" என்றான் அவளிடம்.

"இந்த மாதிரி சமயங்களிலே உணர்ச்சி வசப்படறதினாலே எந்த லாபமும் இல்லே. ருமாவுடைய மனநிலையும் என்னுடையதும் ஒரே மாதிரியா இருக்க முடியாது. நானும் என் அப்பாவும் அம்மாவும் இன்னிக்கு உயிரோட இருப்பதற்குக் காரணம் ஒரு ஹிந்துக் குடும்பம். இன்னிக்குக் காயம் பட்டதும் உன் வீட்டுக்குத்தான் வந்தேன். உன் வீட்டவர்கள் செய்திருக்கிற உதவியை நான் மறந்துவிட முடியுமா?"

ரஞ்சனி சற்று நேரம் பேசாமல் தலையைக் குனிந்தபடி யோசனையில் அமர்ந்திருந்தாள். பிறகு தலையை நிமிர்ந்தபோது மறுபடியும் கண்களில் நீர் நிறைந்திருந்தது.

"ருமாவுக்கு மறந்துவிட்டது மன்மோஹன்! அதான் எனக்குப் புரியல்லே! துக்கம் ஏற்பட்டால் அப்படிக் கண்ணை மறைக்குமா? ஐந்து வயசிலேர்ந்து பழகிய சினேகிதியைக் கூடச் சந்தேகப்பட வைக்குமா?"

ருமாவின் வார்த்தைகள் இவளை எவ்வளவு புண்படுத்திவிட்டன என்று நினைத்து அவனுக்கு வருத்தமாக இருந்தது. ருமாவின் மேல் மெல்லிய எரிச்சல் ஏற்பட்டது.

"டேக் இட் ஈஸி யார்!" என்றான் அவன் மறுபடியும்.

"கொஞ்ச நாட்களிலே புரிஞ்சுப்பாள்."

ரஞ்சனி நம்பிக்கையில்லாமல் தலையை அசைத்தாள்.

"எனக்குத் தோணல்லே!" என்றாள்.

"அவளுடைய அதிர்ச்சிக்குக் காரணம் ஹிந்துக்கள் என்று அவளுக்குத் தோணிப் போச்சு. நான் ஒரு ஹிந்து என்கிற நினைப்பு அவளுக்கு உறுத்தனுமானால் எந்த அளவுக்கு அவள் மனசிலே வித்தியாசம் ஏற்பட்டுப் போயிருக்கும்னு யோசித்துப் பார்!"

"ரஞ்சனி! நீ இப்படிப் புலம்பறதினாலே ஏதாவது பிரயோஜனம் இருக்கப் போறதா?" என்று அவள் அப்பா சற்றுக் கோபமாகச் சொன்னார்.

ரஞ்சனியின் அம்மாவுக்கு இந்த விஷயத்தைப் பற்றின விவாதமே விருப்பமில்லை என்று முகக் கடுப்பில் தெரிந்தது.

"இப்பொழுது எப்படியிருக்கு உனக்கு?" என்று அவனைப் பார்த்து அவள் பேச்சை மாற்றுவதற்காகக் கேட்ட கேள்வியில், "சீக்கிரம் கிளம்பி விடுவாயோ இல்லையோ?" என்கிற ஆர்வம் தொனித்தது.

மனிதாபிமான உணர்வினால் அவன் காயத்திற்கு மருந்தும் கட்டும் போட்டாலும் அவனை முழு மனசுடன் தங்களுள் ஒருத்தனாக அவள் ஏற்றுக் கொள்வாளா என்று அவனுக்குத் திடீரென்று தோன்றிற்று. மாட்டாள் என்று வெகு தீர்மானமாகக் கூடவே எண்ணம் ஏற்பட்டது. விநாடிப் பொழுதில் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு,

"இப்பொழுது தேவலை" என்று எழுந்து நின்றான்.

"நாங்கள் கிளம்புகிறோம். உங்களுடைய உதவியை நான் மறக்கமாட்டேன்."

"நான்சென்ஸ் யார்!" என்றாள் ரஞ்சனி அவசரத்துடன். "இந்த நிலையிலே நீ எங்கே கிளம்பறே? இன்னிக்கு இங்கேயே தங்கு."

"எனக்கு ஒன்றுமில்லே, ரஞ்சனி!" என்றான் அவன் கூச்சத்துடன். "கொஞ்சம் மயக்கமாயிருந்தது. இப்பொழுது ஒன்றுமில்லே."

"நான் நம்ப மாட்டேன்."

"என்னுடைய அம்மா அப்பா கவலைப்படுவார்கள். நான் கிளம்பும்போதே அம்மா தடுத்தாள்."

"ஃபோன் பண்ணிவிடேன்?"

"நாங்கள் எங்கள் வீட்டில் இல்லை. ஹிந்து சினேகிதர்கள் வீட்டில் இருக்கிறோம். அங்கு ஃபோன் இல்லை."

ரஞ்சனியின் முகத்தில் கவலையும் யோசனையும் தெரிந்தன.

"ஜாக்கிரதையாகப் போவீர்களா?"

"நோ ப்ராப்ளம்! வாயை மூடிண்டு நேர வீட்டுக்குத்தான்!" என்றான் பாஸ்கர்.

ரஞ்சனியின் அம்மா சூடாகத் தேநீரும் பிஸ்கெட்டும் கொண்டு வந்து கொடுத்தாள்.

"இரண்டு நாட்களுக்கு வெளியில் தலை காட்டாதே!" என்றாள். "நீ வெளியிலே வரதினாலே உனக்கு என்ன லாபம்? இல்லை வேறு யாருக்காவதுதான் என்ன லாபம்?"

அவன் நன்றியுடன் தேநீரைப் பருகிவிட்டு மெல்லிய புன்னகையுடன் சொன்னான்:

"லாபம் நிச்சயமில்லை. என்னால் தொந்தரவுதான்! நீங்கள் சொல்வது சரி. கொஞ்ச நாளைக்கு வெளியில் வராமல் இருப்பதுதான் புத்திசாலித்தனம்."

ரஞ்சனியைப் பார்க்கும்போது மனத்தில் மீண்டும் ஒரு நெகிழ்ச்சி ஏற்பட்டது. நம்மை முழுசாகப் புரிந்து கொண்ட ஒரே ஒரு ஜீவன் இவள் என்கிற நெருக்கம் ஏற்பட்டது. இந்த நெருக்கத்தின் பிரக்ஞை எப்படிப்பட்ட விநோதமான சரித்திரத் திருப்பு முனையில் ஏற்பட்டிருக்கிறது! அவனை அவளிடமிருந்து

அன்னியப்படுத்த எழும்பிக் கொண்டிருக்கும் சுவர்களும் பாதை தெரியாத முனையையும் மீறி ஒரு நெருக்கம் ஏற்பட முடியுமா? இந்த நெருக்கத்தினால் என்ன சாதகமான விளைவு இருக்க முடியும்?

ஒரு க்ஷண நேரம் மனத்தில் பளிச்சிட்ட சந்தேகத்தையும் சஞ்சலத்தையும் மறைத்துக் கொண்டு அவன் ரஞ்சனியைப் பார்த்து மிருதுவாகச் சொன்னான்.

"கவலைப்படாதே, ரஞ்சனி! நான் ஜாக்கிரதையாய் இருப்பேன். உன்னுடைய பயம் எனக்குப் புரிகிறது. ஏனென்றால் எனக்கும் அதே பயம்தான்."

ஒரு விநாடி இருவர் பார்வையும் சந்தித்தன.

"நீ புரிந்து கொள்வாய் என்று எனக்குத் தெரியும்!" என்றாள் அவள்.

"அது தவிர்க்க முடியாது ரஞ்சனி! அது உனக்கும் எனக்கும் தெரியும்!"

இவர்களது பேச்சு சுத்தமாகப் புரியாத குழப்பத்துடன் நின்றிருந்த எல்லோரிடமும் அவன் புன்னகையுடன், "போய் வருகிறேன், தாங்க்ஸ்!" என்று கூறிவிட்டுப் பாஸ்கருடன் கிளம்பினான்.

படிக்கட்டில் இறங்கும்போது தலையை 'விண் விண்' என்று வலித்தது. சற்று நிதானப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது.

பாஸ்கர் அவனைக் கவலையுடன் பார்த்தான்.

"சைக்கிளில் வீட்டுக்குப் போய்ச் சேர அரை மணி நேரம் ஆகும். உனக்கு தாங்குமா? இன்னும் கொஞ்ச நேரம் இங்கே ஓய்வு எடுத்திருக்கலாமோ, இல்லையோ?"

"பரவாயில்லை யார்! ஐ ஆம் ஆல்ரைட்."

தெரு நிசப்தமாக இருந்தது. வீடுகளுக்குள்ளிருந்து டீ.வி. நிகழ்ச்சியின் ஒலி மெலிதாக அடங்கிய குரலில் கேட்டது. பாஸ்கர் வாயைத திறக்கப் பயந்தவன் போல் மௌனமாக ஓட்டினான்.

ராணுவத் தொப்பிகள் நிற்கும் சாலையாகப் பார்த்துச் செலுத்தினான். நடு நடுவே மன்மோஹன் ஸிங் எப்படியிருக்கிறான் என்று பார்த்துக் கொண்டான்.

"ஐ ஆம் ஓ. கே. யார்!" என்று மன்மோஹன் சிரித்தான்.

"ஐ ஹோப் ஸோ!" என்றான் பாஸ்கர். "ஐந்து பத்து நிமிஷங்களுக்கு நீ கட்டை போலக் கிடந்தே. நான் ரொம்ப பயந்து போனேன்."

'ஐந்து பத்து நிமிஷங்கள்தானா!' என்று அவனுக்கு வியப்பேற்பட்டது. ஒரு சரித்திரக் காலம் நினைவிழந்து கிடந்தாற்போல் பிரமையேற்பட்டிருந்தது.

"என்னவோ 'பயம்'னு நீயும் ரஞ்சனியும் பேசிக் கொண்டீர்களே என்னது, நான் தெரிஞ்சுக்கலாமா?"

"தெரிஞ்சுக்கலாம், ஆனால் இப்ப வேண்டாம். ஒரு தடவை அடி வாங்கினது போதும்."

"ஓ. கே! எனக்கு மறந்துவிட்டது!" பயம். அதன் ஞாபகப்படுத்தலில் மனசு மீண்டும்

சோர்ந்தது.

இந்த இரண்டு மூன்று நாட்களது அனுபவம் சீக்கிய இனத்தை இந்திய சமூகத்திலிருந்து முழுவதும் அந்நியப்படுத்திவிடும் என்கிற பயம்... பாதுகாப்பைத் தேடி அவர்கள் எல்லோரும் பஞ்சாபுக்குச் செல்லத் தொடங்கினால், பஞ்சாபின் சுயேச்சைக் கோரிக்கை வலுப்படலாம். பிரிவினைக்கு வித்தாகலாம் என்கிற பயம்.... அப்படிப்பட்ட சூழலில் பஞ்சாப் ஹிந்துக்களின் பாதுகாப்புக்கு ஆபத்து வரலாம் என்கிற பயம்....

ஒரு சிறிய போக்கிரிக் கூட்டத்தின் வெறியாட்டம் இன்னும் நிலைமையை மோசமாக்கப் போகிறது. ஏற்படப்போகும் புதிய படிமானங்களை, வெறுப்புக்களை, விரிசல்களை எப்படிப் போக்குவது?

அர்ஜுன் ஸிங்கை நினைத்தபோது மனசு மீண்டும் அதிர்ந்தது. அருமையான பையன். ருமாவுக்கு நல்ல கணவனாக இருந்திருக்கக் கூடியவன். பஞ்சாப் அமைதியின் அவசியத்தை அனுபவ பூர்வமாக உணர்ந்திருந்தவன். எத்தனை அக்கிரமமான அநியாயமான முடிவு அவனுக்கு.... ருமாவின் கோபம் மிக இயல்பானது என்று தோன்றிற்று. அரசியலில்நாட்டமேஇல்லாதஅவனுடையவாழ்வை அரசியல் பொசுக்கிவிட்டதை ஏற்றுக் கொள்ள விரும்பாத மறுப்பு அது. இதை ஏன் ரஞ்சனி புரிந்து கொள்ளவில்லை என்று அவன் வியந்தான். ஒரு சீக்கியனுக்குத்தான் அது புரியும் என்று அவன் நினைத்துக் கொண்டான்.

ஒரு சீக்கியனின் எண்ண ஓட்டத்துக்கும் ஒரு ஹிந்துவின் எண்ண ஓட்டத்திற்கும் சரித்திர கலாசாரக் காரணங்களால் வித்தியாசம் நிச்சயம் இருக்கும் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். ரஞ்சனிக்கு என்ன தான் பொது அறிவு இருந்தாலும் இதைப் புரிந்துகொள்வதுசிரமம்என்றுதோன்றிற்று.

''ரஞ்சனிக்கும் உனக்கும் ரொம்பப் பழக்கமா?'' என்றான் பாஸ்கர் திடீரென்று.

அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''ரொம்ப என்பதற்கு என்ன அர்த்தம்?''

''அவளுடைய அம்மா அப்பா கவலைப் படக் கூடிய அளவுக்கு?''

இந்த மதராஸி லேசில்லை என்று நினைத்து மன்மோஹன் புன்னகை புரிந்தான்.

''கவலை தரக் கூடிய விஷயமா அது?''

''ஆமாம். முக்கியமாக இப்ப இருக்கும் சூழ்நிலையிலே!''

மன்மோஹன் சில விநாடிகள் யோசித்துப் பதில் சொன்னான் கம்மிய குரலில்:

''கவலைப்படாதே! அப்படிப்பட்ட பழக்கம் இல்லை. நாங்கள் வெறும் சிநேகிதர்கள்.''

''ஆ, அதோடு நிறுத்திக் கொள்வதுதான் புத்திசாலித்தனம்!'' என்றான் பாஸ்கர்.

தன்னுடைய வார்த்தைகளை அவன் நம்பவில்லை என்று மன்மோஹன் புரிந்து கொண்டான்.

(தொடரும்)



# பாக்யராஜ் பதில்கள்

பி. கே. பெரியசாமி, மதுரை.

* பாரதிராஜா சிஷ்யன் என்று கூறிக் கொண்டு, ஒரு முருங்கைக்காய்ப் பிரச்னையை முந்தானை முடிச்சு படத்தில் புகுத்தியுள்ளீர்களே — எந்த வகையில் நீங்கள் பாரதிராஜா சிஷ்யன்?

என் குருநாதர் 'பதினாறு வயதினிலே' படத்தில் பாவாடை நனையாம நடந்து வா பாக்கலாம்னு ஸ்ரீதேவியை வச்சு சீன் எடுத்து இருந்தாரு. அதைவிட முருங்கைக்கா என்னய்யா மோசம்? இப்படீன்னு நான் சொல்லுவேன். 'மாட்டி விடலாம்'னு பார்க்கறீங்க. அப்படித்தானே?

தப்பு பெரியசாமி! அவர் புழியறது காதல் ரசம். நான் புழியறது கல்யாண ரசம். இத்தனை நாளைக்கு அப்புறமும் நீங்க முருங்கைக் காயையே நினைச்சுக்கிட்டிருக்கீங்கன்னா அது உங்க காமரசம்.

ஆனந்தி பாலகிருஷ்ணன், பங்களூர்.

* டியர் பாக்யராஜ் அவர்களே! 'டென்ஷன்' என்றால் என்ன என்பதை உங்கள் மூளையில் சடக்கென உதயமாகும் ஒரு கதை மூலம் விளக்க முடியுமா?

சிறைச்சாலையில் சில கைதிகளின் சுய சரிதைப் பேட்டிக்காகச் சென்றார் ஒரு பத்திரிகை நிருபர். அங்கே —

'விடிந்தால் தூக்கு' என்ற நிலையில் ஒரு கைதி ஒப்பாரியுடன் துடித்துக் கொண்டிருந்தான். வார்டன் முதல் சக கைதிகள் வரை அனைவரும் அவனுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்க —



குங்குமப் பொட்டு வைத்த ஒரேயொரு கைதி மட்டும் எந்த ஆறுதலும் சொல்லாமல், வருத்தமும் இல்லாமல் ஒரு மெல்லிய புன்னகையில் இருந்தான்.

நிருபர் குழப்பம் அடைந்தார். மெல்ல குங்குமப் பொட்டுக்காரன் அருகில் சென்று—

''உங்க பேரென்ன?'' என்று விசாரித்தார்.

''தவகுரு.''

''நீங்க என்ன தப்பு செஞ்சுட்டு ஜெயிலுக்கு வந்தீங்க?''

''விதிப்பயன்.''

இன்னும் கொஞ்சம் குழம்பிய நிருபர் —

''புரியலே'' என்றார்.

பழைய மர்மப் புன்னகையுடன் குங்குமப் பொட்டுக்காரன் —

''எங்கப்பா பிரபலமான ஜோதிடரு; எனக்கு ஆறு வயசு இருக்கும்போது — ''என்னை மன்னிச்சுடு மகனே! உன்னுடை கிரகாச்சாரம் சரியில்லே; வாலிபத்தில மட்டுந்தான் நீ வெளி உலகத்திலே இருப்பே; வயோதிகம் பூரா ஆயுள் கைதியா இருப்பே'ன்னுட்டுப் போயிட்டாரு. அதுக்கப்புறம் இருபத்திநாலு வயசு வரைக்கும் எத்தனையோ ஜோசியப் புத்தகங்களைப் புரட்டி என் ரேகையை ஆராய்ச்சி பண்ணினேன். திருப்பித் திருப்பிக், கைதி ஆவேன்னு கிரகம் சொல்லிச்சே தவிர, காரணம் சொல்லலே. ஒருநாள் ராத்திரியில தூங்கிக்கிட்டு இருந்த வனை, போலீஸ்காரங்க எழுப்பி, 'நீ கொலை பண்ணிட்டே'ன்னு சொல்லிக் கூட்டிட்டு வந்தாங்க. அதுக்கப்புறம் என் வாழ்க்கையே ராத்திரியாப் போச்சு!'' என்றான்.

நிருபர், 'கடைசியாக இவரிடம் பல விஷயங்களைப் பற்றி அலசுவோம்; இப்போது ஒரேயொரு கேள்வி மட்டும் கேட்போம்' என்ற முடிவுடன், ''நாளைக்குச் சாகப் போற அந்தக் கைதிக்கு எல்லாரும் ஆறுதல் சொல்றாங்க. நீங்க மட்டும் சிரிச்சுக்கிட்டு இருக்கீங்களே, காரணம் என்னன்னு தெரிஞ்சுக்கலாமா?'' என்று கேட்டார்.

''நாளைக்கு அவனுக்குத் தூக்குங்கற விதியை நீதிபதிங்கற மனுஷன் எழுதி இருக்காரு; ஆனா பிரமன் அப்படி எழுதலே!''

''அப்டின்னா?'' — நிருபர்.

''இன்னியோட அவனுக்குச் சனி திசை முடிஞ்சு நாளையிலிருந்து சுக்கிரன் வெளிச் சத்துக்கு வரப் போறான்.''



" பாரதிராஜா சிஷ்யன் என்று கூறிக்கொண்டு ..... "

ஏளனப் புன்னகையுடன் நிருபர், "என்ன சார், அந்தக் கைதியைப் பற்றி நான் விசாரிச்சப்ப, ஜனாதிபதி கூடக் கருணை மனுவை நிராகரிச்சதா கேள்விப்பட்டேன். நீங்க என்னமோ, சுக்கிரன், வெளிச்சம்னு சொல்லிக்கிட்டு இருக்கீங்களே!"

ஒரு ஆழமான புன்னகையுடன் குங்குமப் பொட்டுக்காரன் தொடர்ந்தான்:

"நான்தான் மொதல்லேயே சொன்னேனே, ஆறு வயசிலேயே நான் 'ஆயுள் கைதியாப் போயிடுவேன்னு எங்கப்பா சொன்னாரு. ஒரு சின்ன வம்புக்குக் கூட போகாம நான் எவ்வளவோ பாதுகாப்பா இருந்தும் உள்ளே வந்திருக்கேன். அதான் விதி! நாளைக்கு அவன் நிச்சயமா சாகப் போறதில்லே! வேணும்னா மத்தவங்ககிட்ட பேட்டி எடுத்துட்டுப் போங்க. நாளைக்குக் காலையில அவன் கிட்டப் பேட்டி எடுத்துக்குங்க."

இந்த ஆணித்தரமான பேச்சைச் சோதித்துப் பார்த்துவிடத் தீர்மானித்தார் நிருபர். அன்று மாலைவரை நிருபர் ஒவ்வொரு கைதியிடமும் ஓராயிரம் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தாலும், அவரது உள் மனம் மட்டும் ஒரே ஒரு கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தது.

"குங்குமப் பொட்டுக்காரன் ஜோசியம் பலிக்குமா?'

இரவுப் பொழுது —

உணவில் நாட்டம் இல்லாமல் நிருபர் பிசைந்து கொண்டிருக்க, மனைவி, "என்ன ஏது?" என்று விசாரித்தாள்.

தனது உள்மனத்தின் உறுத்தலை, நிருபர் உருக்கமாகச் சொல்ல, மனைவி எரிச்சலுடன்,

"முந்தா நேத்து எங்க அப்பா அம்மா வந்து தொலைச்சாங்க. அதுக்கு முந்தின நாளு, உங்க மாமாவும் அத்தையும் வந்து தொலைச்சாங்க. நேத்து தங்கச்சியும், தங்கச்சி புருஷனும் திருப்பதிக்குக் காலையிலே தான் டிரெய்னு இராத் தங்கி காலைல எந்திரிச்சுப்போறதாக்கடையைப்போட்டாங்க. இன்னைக்கு இவன் பிரச்னை. ம்... நாளைக்கு எனக்குடேட்டு! இதுதான் என்தலையெழுத்து" என்று எழுந்திருக்க —

நிருபரோ அந்தஏக்கத்தைக்கூடப்பொருட்படுத்தாமல் யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

ஐந்து மணி. அலாரம் அடித்தது. ஆனால் ஐந்து நிமிடங்கள் முன்பே நிருபர் ஆட்டோவைத் தேடி வீதியில் நடந்து கொண்டிருந்தார்.

"இந்நேரத்துக்கெல்லாம் மீட்டர் போட மாட்டேன் சார்." — ஆட்டோ டிரைவர்.

"ஏதும் போட வேண்டாம். எவ்வளவு வேணும்னாலும் தர்றேன். சீக்கிரமா சென்ட்ரல் ஜெயிலுக்கு விடு."

திரும்பத் திரும்பக் குங்குமப் பொட்டுக்காரனின் அர்த்தமான புன்னகையும், ஆணித்தரமான பேச்சும் நிருபரின் மனத்தில் ஓடிக் கொண்டே இருந்தது.

'தான் முட்டாள்தனமாக இந்த விஷயத்தில் இவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டோமோ?' என்ற யோசனை ஒரு பக்கம் இருந்தாலும் —

'சே.... இவ்வளவு தூரம் வந்துவிட்டோம். உள்ளே போய் என்ன முடிவுங்கறதை தெரிஞ்சுக்குவோம்' என்ற உத்வேகத்துடன் ஜெயில் வாசலில் இறங்கினார். துப்பாக்கி ஏந்தியபடி வாசலில் நின்றிருந்த காவலாளியிடம், தூக்குத் தண்டனைக் கைதியின் பெயரைச் சொல்லி —

"என்ன ஆயிற்று?" என்றுநிலைகொள்ளாமல் நிருபர் விசாரிக்க, வந்த பதிலில் அவர் முகத்தில் ஈயாடவில்லை.

(தொடர்ச்சி 59- பக்கம்)

# இவர்கள் சிறுகதைச் சிற்பிகள்

"நாம் பார்க்கும் வெளி உலகுக்குப் பின்னால் மனோலோகம் ஒன்று இருக்கிறது என்பதை மறந்து விடுகிறோம். ஆற்று வெள்ளத்திலே மேலே மிதந்து வரும் நுரை திரள்களும் உதிர்ந்த மலர்களும் குப்பைக் கூளங்களும் மட்டுமே நம் கண்ணில் படுகின்றன. ஆனால் ஜலப்பரப்பின் அடியிலே உள்ள சுழிகளையும் சுழல்களையும் நாம் அறிவதில்லை. தினந்தோறும் நாம் பார்த்துப் பழகி வரும் மனிதர்களைப் பற்றி நமக்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கிறோம். உண்மையில் அவர்கள் வாழ்க்கையின் முக்கியமற்ற வெளிப்படையான அம்சங்கள்தான் நமக்குத் தெரிவது. அவர்களுடைய உள்ளத்தில் குமுறும் ஆசாபாசங்கள் விரோத வைஷம்யங்கள் இன்ப துன்பங்கள் இவை ஒன்றும் நமக்குத் தெரியாது!''

— அமரர் கல்கி எழுதிய வரிகள் இவை. 'பவானி பி. ஏ. பி. எல்.' நூலின் முன்னுரையில் ஒரு பகுதி. நாம் அன்றாடம் காண்கிற மேலோட்டமான நிகழ்ச்சிகளை மட்டுமின்றி அந்நிகழ்ச்சிகளின் கர்த்தாக்களாகிய மாந்தரின் உள்மனத்துக்குள்ளும் புகுந்து பார்த்து, உண்மைகளை அறிந்துரைப்பதே கதாசிரியரின் கடினமான பணி.

இந்தச் சிரமமான பணியில் அற்புதமான முறையில் வெற்றி கண்டிருக்கிறார், இவ்வாண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றுள்ள திரு. மு. அய்யாக்கண்ணு. பெண்மையின் பரிமாணங்களை மில்லிமீட்டர் பிசகாமல் அளந்து கூறும் திரு. ''அய்க்கண்,'' ''ஓவிய மேதை திரு. கோபுலு நடுவர்களில் ஒருவராக இருந்ததோடு என் கதைக்குச் சித்திரமும் வரைந்தது எனக்குக் கிடைத்த போனஸ் பரிசு'' என்கிறார்.

இவர் பிறந்தது கோட்டையூர். (பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் மாவட்டம்). திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரியில் தமிழ்த்துறைப் பேராசிரியர். சிறு வயதில் ஏகாதசி நாட்களில் விடிய விடியக் கண் விழித்து முழு ராத்திரி நாடகங்கள் எழுதியதே எழுத்துத்துறையில் ஆரம்பம். உயர்நிலைப் பள்ளிப் பருவத்தில், பிலிம் துண்டுகளை லென்ஸ் வழியே வெள்ளைச் சுவரில் ''புரொஜெக்ட்'' செய்து அந்தந்தக் காட்சிக்கு ஏற்பக் கதை கற்பனை செய்து சொல்லுவார். முதல் சிறுகதை, மாணவர் திட்டத்தின் கீழ் விகடனில் பிரசுரமாயிற்று. இதுவரை 400 சிறுகதைகள் 15 நாவல்கள், 10 நாடகங்கள் எழுதி விட்டார். சரித்திரச் சிறுகதைக்கான முதல் பரிசை கல்கி இவருக்கு ஏற் க னவே ஒருமுறை வழங்கியிருக்கிறது.

* * * * * * *

• அய்க்கண்.

• அன்னம்.

• இரா. செல்வ சுப்பிரமணியன்.

• அனுஷா.

ஒரு பெண்ணின் உணர்ச்சிக் குவியல்களை இரண்டாவது பரிசு பெற்ற "இழைத்தவர்கள்" சிறுகதையில் அழகாகச் சித்திரித்துள்ள ஸ்ரீமதி கே. லக்ஷ்மி, கூனூரைச் சேர்ந்தவர். தம்மைப் பற்றி அதிகம் கூறிக்கொள்ள விரும்பாத இந்த சங்கோஜி, "அனுஷா" என்ற புனை பெயரில் எழுதி வருகிறார். "மூன்றாண்டுகளாகத் தொடர்ந்து போட்டியில் கலந்து கொண்டு வருகிறேன். முதல் பரிசு பெறும் நாள்தான் கோட்டையைப் பிடித்ததாகக் கருதுவேன்! எனவே அடுத்த ஆண்டும் படையெடுப்பேன்!" என்கிறார். அமுதசுரபி நடத்திய போட்டியில் முதல் பரிசு பெற்றவர்தான் அனுஷா என்றாலும், தாம் ஆரம்ப நிலையில்தான் இருப்பதாக அடக்கத்துடன் கூறிக் கொள்ளும்போது, 'இந்தப் புலி பதுங்குவது பாய்வதற்காகத்தான்' என்று கருத இடம் தருகிறார்!

* * * * * * *

மூன்றாவது பரிசு பெற்ற "நெஞ்சில் ஆசை கோடி சுமந்து" என்ற சிறுகதையை எழுதிய இளைஞர் செல்வசுப்பிரமணியனுக்கும் உள்ளத்தில் பல கோடி ஆசைகள் உண்டு. அதில் முதல், முக்கிய ஆசை நிறைவேறி விட்டது! "அறிமுக எழுத்தாளர்" என்ற கூடுதல் சிறப்புடன் இவரது கதை பரிசும் பெற்று விட்டது! இரா. செல்வசுப்பிரமணியன் எழுதிய முதல் கதை வீட்டில் தூங்குகிறதாம். இரண்டாவது கதை மூன்றும் பரிசு பெற்று விட்டது! நெல்லை கிருஷ்ணபுரத்தில் பிறந்த இவர், நாகர்கோயிலில் தொலைபேசியகத்தில் 'ஆபரேட்டர்'. "ஐந்தாம் வகுப்பு படிக்கும் போதே பொன்னியின் செல்வனைப் படித்து மகிழ்ந்தேன்; கல்லூரியில் படிக்கும் போது கவிதை எழுதும் ஆசை பிறந்தது; இப்போது சிறுகதைப் பக்கம் கவனம் திரும்பியுள்ளது" என்கிறார்! நாவல் எழுத அவசரப்பட வேண்டாம் என்று சொல்லி வைப்போமா?

* * * * * * *

மூன்றாவது பரிசு பெற்ற மற்றொரு கதை "கண்ணுக்குத் தெரியாத கோடு." இதனை எழுதிய "அன்னம்" தமிழ்ப் பத்திரிகை வாசகர்களுக்கு ஏற்கெனவே நன்கு அறிமுகமானவர். இவரது சிறுகதைகள் இடம் பெறாத பத்திரிகைகளே இல்லை எனலாம். அமரர் தேவனின் மருமானாகிய விசுவநாதனின் ரத்தத்திலேயே சிறுகதை எழுதும் ஆற்றல் ஊறிப் போயிருக்கிறது. மதுரை அஞ்சல் துறை பயிற்சி நிலையத்தின் முதல்வராகப் பணியாற்றி வருகிறார். இவர் 1959—இல் எழுத ஆரம்பித்து இன்று வரை எழுதிக் குவித்துள்ள சிறுகதைகளின் எண்ணிக்கை மலைக்க வைப்பது: 802! வேறு பல புனை பெயர்களிலும் எழுதி வருகிறார் "அன்னம்." அவற்றுள் ஒன்றாகிய "ஜே" என்பதையே பரிசு பெற்ற நால்வருக்கும் வாழ்த்தாகக் கூறுவோம்!

—பி. எஸ். எம்.

57-பக்கத்தின் தொடர்ச்சி

இப்பொழுது உங்கள் முகம் பூராவும் பரவியுள்ளதே — இதுதான் டென்ஷன்!



எதிர்காலத்தில் தமிழர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக — தற்காப்புக்காக ஒவ்வொருவரும் இடுப்பில் கத்தி வைத்துக் கொள்ள வேண்டும் (தன்னிடமிருந்த கத்தியை எடுத்துக் காட்டுகிறார்!)

— மதுரை ஆதீனம்.

எனக்காக டெல்லியில் ஒதுக்கப்பட்ட வீடு மிகவும் பழையதாகவும், பாழடைந்த மண்டபம் போல் இருந்ததாலும், எல்லா இடங்களிலும் மழைத் தண்ணீர் பாய்ந்து கொண்டிருந்ததால், அது எந்த நிமிடமும் இடிந்து விழுந்துவிடும் என்ற நிலையில் இருந்ததாலும்தான் ஒரு மணி நேரத்திற்குள்ளாக அந்த வீட்டை விட்டு வெளியேறி உடனே அரசாங்கத்திற்குக் கடிதம் எழுதி அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன்.

— ஜெயலலிதா.

தொடர்ந்து விடுதலைப் புலிகளை வெளியேற்றுகிற காரியம் நடக்குமானால் எங்கள் சார்பாக விடுதலைப் புலிகளை உருவாக்குகிற முகாம்கள் தொடங்கப்படும். தமிழ்நாட்டு வாலிபர்களே அந்த முகாம்களில் இருப்பார்கள். அனுமதிப்போமா என்று கேட்டால், தமிழ் நாட்டில் காடுகளா இல்லை. வீரப்பன் மிச்சம் வைத்துள்ள காடுகள் இன்னும் உண்டு!

— கலைஞர் கருணாநிதி.

தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த மதுராந்தகம் ஞான சவுந்தரி கற்பழிக்கப்பட்டுக் கொலை செய்யப்பட்ட சம்பவத்தை யாரும் மறந்திருக்க முடியாது. உங்கள் (அ.இ. அ.தி.மு.க.) ஆட்சியில் நடந்த கொடுமை தான் இது! அ.இ.அ.தி.மு.க. ஆட்சியில் பெண்களுக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது? ஆடத்தெரியாத நாட்டியக்காரி தெருக் கோணல் என்பதா?

— தங்கவேலு எம்.எல்.ஏ. (இ.காங்).

## ஸ்பாட் லைட்

காமிராக்காரரே, காமிராக்காரரே மொதல்லே கழுத்தை நீட்டுங்க. அம்புட்டு ஃப்ரேமையும், அழகழகாக் குடுத்ததுக்கு உங்களுக்கு ஒரு மாலே போட்டுட்டுப் பிற்பாடு படத்தைப் பத்திப் பேசுவோம்.

பாரதி ராஜான்னு கிராமந்தான். கிராமன்னு பாரதிராஜாதான். அதிலயும் இதில சிவாஜி. கேக்கணுமா? ராதாம்மா கடைசில குடிசைக்குள்ள காலே வெக்கறப்ப, ஒரு சிலுப்பு சிலுத்துக்கறாரே மனுஷன் அது ஒரு சீன் போதும். மத்ததெல்லாம் சொல்லிக்கிட்டே போவலாம். இவரை பத்தி எவ்வளவு தான் சொல்றது? படத்தில் உசிரை விடறாரு. ஆனா நெஜத்தில தீர்க்காயுசா இருந்து இதே மாதிரி அமைதியா வித்தியாசப் பாத்திரங்கள்லே ஆயிரம் படம் பண்ணணும்.

அப்புறம் அந்த மொதத்தாரம், ஆத்தாடி. வடிவுக்கரசியாமில்ல? புல்லுல் கறுப்பு வுளுந்து காது தோடு வரைக்கும் வந்து பாம்பட்மெல்லாம்மாட்டிக்கிட்டுநெருப்புலபட்ட சோளக்கதிரு மாதிரி என்னா பொறி பொறிய ருங்க.

இந்த ராதாம்மா. தோள்ல பச்சை குத்திக்கிட்டு, சாக்கிட்டு கூட சரியா இல்லாம சரியான கிராமத்து குயிலுதான். பேசிக்கிட்டே இருக்கும்போது பீச்சாங்கைல இடுப்புக்கு மேல ஒரு சொரி சொரியறது, ஆத்து மீனைக் கொளம்பாக்கி அப்படியே வாயில போட்டு 'டப்'புனு சப்புக் கொட்டறது — அப்படியே கள்ளங் கவடில்லாத பட்டிக்காடுதான்.

குருவி.... குருவி.... ஏ.... குருவின்னு ஒரு பாட்டு — ரேடியோவில கேக்கறப்ப 'எதில? எதில'ன்னு யோசனே ஓடும். இதிலதான்! மூங்கில் காட்டைக் காத்து வந்து கட்டிப் பிடிக்கறாப்பலதான் இளையராசா பாட்டெல்லாம் போட்டிருக்காரு. ஆனா இந்த டைரக்டரு பாருங்க, 'பாதிப் பாதி பாட்டோட நிறுத்திக்க, போதும்'னு சொன்னாப்பல இருக்கு. ஒரு பாட்டுக் கூட நீளமா கேக்க முடியலே. நெஞ்சு கெடந்து அடிச்சிக்குது.

புஸ்தி மீசையோட பரிசல்ல வந்து உக்காருற ஆளு சத்யராஜாமில்ல.... ஒரே ஒரு ஸீனுதான். ஆனாலும் அந்தக் கிராமத்து பாஷையெல்லாம் சரசரன்னு எடுத்து உடறாரு.

இந்தப் புது ஆளுங்க ரெண்டு பேரும் ரொம்பப் பயந்துட்டாங்களோ என்னவோ! நடிக்கறதுகூட அங்கங்க பயங்கலந்துதான் இருக்கு. என்ன சொல்றீங்க?

'அய்யா எனக்கு ஒரு உண்மை தெரிஞ்சாகணும்' — அந்தாளு கையில காட்ற கட்டை விரலையும், அவர் கொரலையும் நெனேச்சிக்கிட்டு நம்ப ஊட்டுப் பாப்பா இப்பவும் பயந்துக்கிடுது!

சிவாஜி வாயைக் கொப்பளிச்சித் துப்பறதும், ராதாம்மா அந்த எடத்தை வுட்டு ஓடறதும் செவுத்துல தண்ணியை 'வடிவுக்கரசி பாத்துட்டு வேற மாதிரி நெனேச்சுகிட்டுத் தொரத்தறதும் — இந்த ஒரு எடத்திலதாங்க சிரிக்க முடியுது.

மத்தப்படி முழுக்க முழுக்கப் பாரதிராஜா வார்த்தை வார்த்தையா, பொறுக்கி கவிதை எழுதியிருக்காரு.





# குங்குமச்சிமிழ்

நம்ம டைரக்டருங்களுக்கே ஒரு சாபக் கேடு. நாலு படம் தொடர்ந்து நல்லா பண்ண மாட்டாங்க. ஆர். சுந்தரராஜனும் அப்படித் தான்.

வேலையில்லாப் பட்டதாரி வேலை தேடி மெட்ராஸ் வரராம் (கைல நானூறு ரூபா யோடு) — பஸ்ஸில ஒரு பொண்ணு வந்து ஏறுதாம் டிக்கெட் வாங்கக் கூட காசில்லாம. அவளுக்கு டிக்கெட் வாங்கி, சந்தேகப்பட்டு, அப்புறம் மெட்ராஸ்ல வந்து லவ் ஆகி.... ஒரு சீன்ல கூட அழுத்தமோ, அலங்காரமோ இல்லாம என்ன லவ் வேண்டிக் கிடக்கு சொல்லுங்க. இளவரசியும் மோகனும் பீச்ல வேர்க்கடலை கொறிக்கற மாதிரி தவ்ளூண்டு இன்ட்டரஸ்டோட பண்ணியிருக்காங்க. பசி தாங்காம கல்யாணத்துக்கு ஓசிச் சாப்பாடு சாப்பிடப் போயி, அங்க அவமானப்பட்டு அதனால ராவோட ராவா லெட்டர் எழுதி வச்சிட்டுக் கௌம்பிடுது ஹீரோயின் — ஆறு மாசம்கழிச்சு இதேஇடத்திலசந்திப்போம்னு. (அது என்ன கணக்கோ?) அப்புறம் மோகன் கைல பஸ்ஸில போறப்ப பன்னெண்டாயி ரம் எவன் பணமோ கெடைச்சு, அவர் ஜாலியாநீலகிரிஸ்மலைலவேலைக்குப்போயிட ருரு-இன்டர்வெல்முடிஞ்சகையோடரேவதி வராங்களா, இனிமே நல்லாருக்கும்டா படம்னு நினைச்சு உக்காந்தா ஃபணால்!

ரேவதிக்குக் காகிதம் மாதிரி வெயிட் இருக்கற ரோல். கொஞ்சம் துருதுருன்னு தான் செய்ஞ்சிருக்காங்க. ஆனா வேஸ்ட். யார் பணத்தை எடுத்ததால அவர் கல்யாணம் நின்னு போச்சோ அதே மோகனை அவர் லவ் பண்ண ரேவதியை வழியோட போற சந்திரசேகர் லவ் பண்ண — இவ்ளோ இருந் தும் படத்தில இன்ட்டரஸ்டே இல்லாம பண் ணிட்டாங்களே, அதான் வருத்தமாயிருக்கு.

சினிமாவெல்லாம் கன்டின்யூட்டின்னு ஒண்ணு இருக்குமே, கேள்விப்பட்டிருக்கீங் களா, இந்தப் படத்தில அதையும் காத்தில அவுத்து விட்டுட்டாங்க. இளவரசியை மாமி யோட தம்பி தூரத்தரப்ப கைல பெட்டி கெடையாது. ஆனாபஸ்லஏறும்போதுபெட்டி உண்டு. மெட்ராஸ்ல இருக்கற கோபால கிருஷ்ணன் அநாவசியமா கோயமுத்தூர் ஆஸ்பிடல்ல போய் ஏன் அட்மிட் ஆனாரு? எப்ப மெட்ராஸ் வந்தாரு? கேக்க ஆரம்பிச் சா இன்னும் ஆயிரம் விஷயம் கேக்கலாம்.

என்னவோ படிச்சிட்டு ரிக்ஷா இழுத்தா கேவலம்னு நெனைக்கிற இளவரசியோட ஐடியாவே புரியலை. அதுக்காகக் கைல இருக்கற வேலையை விட்டுட்டு மெள்ளத் ஆர் கன்ல புய்புய்னு மோகன் சோகமா ராகம் பாடறதும் தமாஷ்.

இளையராஜா தூள் தூளா மியூஸிக் போட் டிருக்காரு. ராஜராஜன் சிரமப்பட்டுக் காமி ராவை யூஸ் பண்ணி அருமையான காட்சிங் களை அள்ளிக் கொடுத்திருக்காரு (கூட்ஸ் வண்டியிலே பாடல் காட்சி வித்யாசமா இருக்கு).

கச்சேரியில் பக்கவாத்தியம் மட்டும் நல்லா இருந்தா போதுமா?

–ஜெயமன்மதன்

## இந்திய கிரிக்கெட் குழு

* உமா தேவி, சென்னை—20.

? பாரத யுத்தத்தைத் 'தர்ம யுத்தம்' என்பது எப்படித் தகும்? கர்ணனை அதர்மக் கொலை செய்கிறார்கள். தங்கள் பதில் என்ன?

! உலகில் அதர்மத்துக்கும் தர்மத்துக்கும் இடையில் சதா போர் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் நடக்கிறது. இதைத்தான் மகா பாரதம் சித்திரிக்கிறது. 'தர்மமே வெல்லும்' என்ற நம்பிக்கைதான் வாழ்க்கையையே அர்த்தமுள்ளதாக்குகிறது. நீங்கள் கேட்கும் கேள்வியைக் கர்ணனே போர்க்களத்தில் கேட்கிறான். அப்போது பகவான், கர்ணன் செய்த அதர்மங்களையெல்லாம் நினைவூட்டி, "கர்ணனே, பாவியே! அப்போதெல்லாம் உனக்கு தர்மம் நினைவு வரவில்லையே! இப்போது தர்மத்தை ஏன் இழுக்கிறாய்?" என்று கேட்கிறார். தர்மத்தின் இறுதி வெற்றிக்காக தர்மாத்மாக்களும் சில சமயம் அதர்மமான காரியத்தைச் செய்ய நேர்கிறது. வள்ளுவர் கூட இதை ஏற்கிறார். மிக எளிமையாக எழுதப்பட்ட ராஜாஜியின் மகாபாரதத்தைக் கருத்தூன்றிப் படித்தால் உங்கள் ஐயமெல்லாம் தீர்ந்து போகும் என்று எனக்குத் தோன்றுகிறது.

* ஹரணி சங்கர், சுத்தமல்லி.

? தமிழ் ஈழத்திற்குப் பதிலாக இலங்கையை இந்தியாவுடன் சேர்க்க வேண்டும் என்ற ஸி. சுப்பிரமணியத்தின் யோசனை எப்படி?

! "முதிர்ந்த அரசியல்வாதியான ஸி.எஸ்ஸா இப்படிச் சொன்னார்?" என்று வியப்பும் பரபரப்புமாக ஓ டிச் சென்று கேட்டால், அவரோ நிதானமாக, "நோ! இப்படி ஒரு போதும் நான் சொன்னதில்லை" என்று மறுத்ததோடு மட்டுமின்றி, "பேச்சு வார்த்தை மூலமாகத்தான் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும். அது ஒன்றே வழி" என்றும் அழுத்தம் திருத்தமாகக் கூறிவிட்டார்.... என் மொபெட் விழுங்கிய பெட்ரோலுக்கான பணத்தை எம். ஓ. செய்வீர்களா, மிஸ்டர் ஹரணி சங்கர்? (ஒருவேளை, சுப்பிரமணிய சுவாமி கூறியதை, ஸி. எஸ். கூறியதாகக் குழப்பிக் கொண்டுவிட்டீர்களோ?)



ஏகனுமிக் பாலன்ஸிங்.

* லலிதா ஸ்ரீனிவாசன், சென்னை—4.

? கல்யாணப் பத்திரிகை வந்தால் என்ன பரிசு கொடுப்பது என்று யோசித்துத் தலைமயிரைப் பிய்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. உபயோகமான யோசனை ஒன்று சொல்லுங்களேன்?

! ஒரு நல்ல புத்தகத்தைப் பரிசாக அளிப்பதைவிடச் சிறந்த யோசனை ஏதும் இருக்க முடியாது. பரிசைப் பெறுபவரைப் பல மணி நேரம் இன்பத்தில் ஆழ்த்துவதோடு இப்பரிசு எழுத்தாளரையும் வாழவைக்கும். 'புத்தகங்களைத் தனிநபர்கள் விலை கொடுத்து வாங்குவதில்லை; நூலக ஆர்டரையே நம்பியிருக்க வேண்டியுள்ளது' என்ற பழிச்சொல் நீங்கும். நூலை பரிசாகப் பெறுபவர் மட்டு



* ஐயம் தீர...



* ஒன்றே வழி.

மின்றி வேறு பலரும் அதனால் பயனடைவர். பல காலத்துக்கு உங்கள் அன்பை உணர்த்தியபடி அது அவரிடம் குடியிருக்கும்.

* ஆர். ஜே. குமார், சென்னை—26.

? கடந்த தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட அனைத்துக் கட்சி எம். எல். ஏ.க்களையும் ஒன்று கூட்டி இலங்கைக்கு அனுப்பி வைத்தால் என்னவாகும்?

! 'இலங்கைப் பிரச்னை எப்படியானாலும் பெருமளவு தமிழகத்தின் பிரச்னைகள் தீர்ந்து போகும்' என்று சொல்லலாம் என்று பார்த்தால் அப்போதும் நியமன உறுப்பினர்கள் இங்கு பாக்கி இருப்பார்களே!

* பி. ராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.

? தரமான நல்லபடங்களை இயக்கிய டைரக்டர்கள் கூடத் தற்போது மசாலாவில் இறங்கிவிட்டார்களே?

! 'எகனமிக் பாலன்ஸிங்' என்று சொல்லிவிட்டாரே, பாலசந்தர்!

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.

? இலங்கையுடன் நட்புறவு இல்லாத இந்த நேரத்தில் இந்திய கிரிக்கெட் குழு இலங்கை சென்றது சரியா?

! தென் ஆப்பரிக்காவின் இனவெறிக் கொள்கையை எதிர்ப்பதால், அங்கு போக மறுக்கும் கிரிக்கெட் குழுவினர் அதைவிடக் கொடுமையாகத் தமிழர்கள் தாக்கப்பட்டும் இலங்கைக்குச் சென்றதும், அவர்கள் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டினுல் அனுப்பப் பட்டதும், இதைத் தடுக்கத் துப்பில்லாமல் மத்தியில் ஒரு விளையாட்டுத்துறை அமைச்சர் வேறு இருப்பதும்..... எத்தனைதான் தலையில் அடித்துக் கொண்டாலும் போதாது, அத்தனை மானக்கேடு!

* எம். ரவீந்திரன், கச்சனம்.

? "அவன் காதல்
லவ்வில்
ஆரம்பித்து
ஸ்டவ்வில்
முடிந்து போனதோர்
அத்தியாயம்."
— இந்தப் புதுக்கவிதை பற்றி தங்கள் மதிப்பீடு?



* அரசியல் விஞ்ஞானி.



* நேரு குடும்பம் மட்டுமே...



* ஆர்க் லாம்ப்.



* குத்து விளக்கு.

* மு. சி. பிரேம்குமார், மதுரை.

? ம.பொ.சியை அரசியல் விஞ்ஞானி என்கிறாரே அமைச்சர் ஆர். எம். வீ?

! உண்மையில் விஞ்ஞானி ஆர். எம். வீ. தான். அவர்தானே இப்படி புதிய புதிய தமது கண்டு பிடிப்புக்களை அறிவிக்கிறார்!

* பி. ராஜசேகரன், மதுரை *

? லோக்பால் புதிய சட்டத்தில் சிலருக்கு மட்டும் விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறதே?

! குற்றம் நிரூபிக்கப்படவில்லையானல் குற்றச் சாட்டைச் சுமத்தியவர் மீது நடவடிக்கை என்ற பயமுறுத்தலை வேறு உள்ளடக்கியிருக்கும்போது சிலருக்கு மட்டுமென்ன, எல்லோருக்குமே விதி விலக்கு அளித்துவிட்டது போல்தான்!

* ஆர். அரிகோபி, குடியாத்தம்.

? ராஜீவ் காந்தி சுதந்திர தின உரையில் நேரு, இந்திரா காந்தி தவிர மற்ற சுதந்திரப் போராட்டத் தலைவர்கள் பெயர்கள் எதையும் குறிப்பிடவில்லை என்ற பி. ஜே. பி. ஆட்சேபணை குறித்து.....?

! இதைக்கூட பொருட்படுத்தாமல் பெருந்தன்மையாக நாம் இருந்துவிடலாம். ஆனல் ருஷ்யாவில் நடந்த இளைஞர் விழாவில் இந்தியப் பிரதமர்கள் என்ற வரிசையில், நேரு குடும்பத்தினர் மூவரை மட்டுமேபுகைப்படங்களாகக் காட்சிப் பொருளாக்கியிருந்தது மன்னிக்க முடியாத குற்றம்.

# இலங்கை சென்றது சரியா?

! அருமை! அருமை! பெருமைப்படுகிறேன், இதன் ஆசிரியருக்கு என் வாழ்த்தைக் கூறுவதில்.

* எஸ். சியாமளா, கும்பகோணம்.

? அமைச்சர்கள் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொள்கிறார்களே?

! அரசும் அமைச்சரவையும் செயலற்றிருப்பதாக யாரும் சொல்லிவிடக் கூடாதே என்பதற்காக இருக்கலாம்!

* ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? செயற்கை மழையை இன்னும் எத்தனை காலத்துக்கு நம்பிக் கொண்டிருப்பது?

! அது பண மழையாகச் சிலருக்கு இருந்து வரும்வரை!

* இசை எஸ். கலீல் ரகுமான், பொள்ளாச்சி.

? குங்குமச் சிமிழில் தங்களைக் கவர்ந்தது ரேவதியின் நடிப்பா, இளவரசியின் நடிப்பா?

! முகத்தில் தேங்கிய சோகம், கடற்கரை மணலில் காற்று வாங்குதல் என்று இளவரசிக்கு அடக்கமான நடை. கண்டதைப் போட்டு உடைத்துவிட்டுத் திருதிருவென்று விழிக்கும் ரேவதி. குத்துவிளக்கைவிட ஆர்க் லாம்ப் ரேவதிதான் அதிகமாகக் கவர்கிறார்.

* ரூ 10 பரிசு பெறுபவர்:
பி. ராஜசேகரன்,
10, ஊர்து நகர் முதல் தெரு,
கோ. புதூர், மதுரை-7.

**நீங்கள் கேட்டவை - தராசு**




# சினிமா ஆசைக்குக் குழந்தையைப் பலி கொடுப்பதா?

## வட்டமேஜை

**சாதனைச் சிறப்பிதழ்!**

* மூலையில் உட்கார்ந்து அழுதவன் லாபக் கணக்குப் பார்க்கிறான்; ஒன்றுக்கும் உதவாதவர்கள் உயர் சாதனை புரிகிறார்கள். சரித்திர புருஷர் அரசியல் ஞானியாக உயர்கிறார். இடிந்த கோட்டை, இளைஞர் மையமாகிறது..... வரிசையாகத் தலைப்புக்களைப் பார்த்து, கல்கி 25.8.85 இதழ் சாதனைச் சிறப்பிதழோ என்று நினைத்து அட்டையைப் பார்த்தேன்: 'கர்நாடகா சிறப்பிதழ்—2 என்றது.

சென்னை—91. ஐயாறு எஸ். வாசுதேவன்.

* அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது போல் இரண்டு வாரங்களாகக் கல்கியின் கர்நாடகா அட்டைப் படங்கள் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன.

சென்னை—87. எம். எட்வர்ட் ராசப்பா.

* ஃபைல்கள் தன்னைத் தேடி வரக் காத்திருக்காமல், தானே சம்பந்தப்பட்ட துறை அலுவலகத்திற்குச் சென்று ஃபைல்களைப் பார்த்துக் கையெழுத்திடும் அமைச்சர் ஆல்வாவின் கடமை உணர்வும், எளிமையும் சுறுசுறுப்பும் எங்களை மிகவும் கவர்ந்தன.

சென்னை—17. மோகனரூபன்.

* இலவச உடை, இலவச மதிய உணவு, இலவசப் பல்பொடி என்று பல இலவசங்களால் மக்களை முழுச் சோம்பேறிகள் ஆக்காமல் அவர்கள் உழைத்துச் சம்பாதிக்க உதவும் 'அந்த்யோதயா' திட்டத்தை வாயார வாழ்த்த வேண்டும்.

சென்னை—5. இரணியல் கலை.

* 'நன்ன ஜனகளு' கவிதையில் இன்றைய நடுத்தர வர்க்க மக்களின் அவல நிலையைச் சித்திரித்துள்ளார் சித்தலிங்கையா. மொழிபெயர்த்த சுஜாதாவுக்கு நன்றி.

கும்பகோணம். பா. கிருஷ்ணதாஸ்.

* "இன்னுமா இந்தக் கொடுமைகள்!" என்ற தலைப்பில் 11.8.85 இதழில் வெளியான கட்டுரையில் அக்ராபாளையம் ஆசிரியர்களும் அந்தக் கொடுமைக்குத் துணை போனதுபோல் எழுதப்பட்டிருக்கிறது. இது தவறு. ஆசிரியர்களுக்கு உள்ள ஒரே சொத்து ஒழுக்கம்தான். அதற்கே களங்கம் வருகின்றபோது எப்படி எங்களால் ஏற்றுக் கொள்ள முடியும்?

அக்ராபாளையம். சி. முனுசாமி.

**(எமது நிருபர் தாம் நன்கு விசாரித்தறிந்த உண்மைகளையே எழுதியிருப்பதாக உறுதியுடன் கூறுகிறார் — ஆ.ர்.).**

**பாரபட்சமான தேர்வு!**

* வட்டமேஜைக்கு வாசகர் கடிதங்கள் தேர்ந்தெடுப்பதையும் தராசு பதில்களுக்குக் கேள்விகள் தேர்ந்தெடுப்பதையும் பார்த்தால் சில நபர்கள் மட்டுமே கல்கியின் இந்தப் பக்கங்களைக் குத்தகை எடுத்திருப்பார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பாபநாசம். பனிமலர்.

* நடைமுறையில் நாம் சந்திக்கும் உண்மையினை உயர்வாக, உயிரோட்டமாக, உணர்த்திவிட்டார் 'அன்னம்' கண்ணனிற்குத் தெரியாத கோடு சிறுகதையில். வர்ணனைகளைக் குறைத்துக் கருத்துக்கு முக்கியத்துவம் கொடுத்திருப்பது தனிச் சிறப்பு. கல்கியின் திறனாய்வைப் பாராட்டுகிறோம்.

ஆங்கரை. ஆர். தமிழ்ச் செல்வி.

**ஒரு பக்கத்தை வீணாக்கிவிட்டார்கள்!**

* புதுமை என்ற பெயரில் நந்தினி போன்ற பெண்கள் 'கன்னாபின்னா' என்று ஏதாவது செய்தால் நீங்கள் ஏன் ஐயா அதற்கு ஒரு பக்கம் வீணாக்க வேண்டும்?

மயிலாடுதுறை. என். செந்தில்குமார்.

* நந்தினி மாதிரி சில 'ஸ்போர்டிவ்' பெண்கள் இருப்பதாலேதான் 'காலேஜ் லைஃப்' சுவையாக இருக்கிறது.

காரைக்குடி. கலைப்பிரியன்.

* அண்மையில் நான் ஒரு திரைப்படத்திற்குச் சென்றிருந்தேன். பெரும் கூட்டம். முதலில் டிக்கட் எடுக்கப் பெண்கள் மட்டும் அனுமதிக்கப்பட்டார்கள். ஆண்கள், கேட்டுக்கு வெளியே காத்திருந்தனர். திடீரென்று கேட்டைத் திறந்தனர். உடனே ஆண்கள் திபு திபுவென டிக்கெட் எடுக்க ஓடினார்கள். அப்போது ஒரு குழந்தை வழியில் கடந்துவிட்டது. குழந்தையின் தாயோ குழந்தையைக் கவனிக்காமல் டிக்கெட் எடுப்பதில் அவசரம் காட்டினாள். விளைவு குழந்தை இறந்தது. தியேட்டருக்கு டூட்டி போட்ட காவலர்கள் நிம்மதியாக முந்தைய காட்சி படம் பார்த்தபின் வெளி வருகிறார்கள்! அவர்களால் அக்குழந்தையின் உயிரைத் திருப்பித் தர முடியுமா? பெண்கள்தான் ஆகட்டும். இப்படிப்பட்ட கூட்டத்தில் ஏன் கைக்குழந்தையுடன் வர வேண்டும்?

புதுவை—8. ஏ. ஜே.

**பரிசு பெறும் கடிதம்**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran



ரோஜாப்பூக்களுக்காக வக்காலத்து வாங்கி வழக்காடுகிறது ஒரு பாரசீகக் கவிதை:

"வியாபாரிகளே! வியாபாரிகளே!
நீங்கள்
ரோஜாக்களை விற்று விற்று
எதை வாங்கப் போகிறீர்கள்.
ரோஜாக்களை விட
உயர்ந்ததாய்?"

(கவிஞர் வைரமுத்து எழுதிய கேள்விகளால் ஒரு வேள்வி நூலிலிருந்து.)

வண்ணப்படம்: திலீப் பானர்ஜி.

